# சிறுவர் கதைச் சோலை

(ஆறும் வகுப்புத் துணைப்பாட நூல்)

ஆசிரியர் :
வித்துவான் பு. செல்வராசன்
தலைமைத் தமிழாசிரியர்
C. A. H. H. M. உயர்நிலைப் பள்ளி, சென்னை - 1.

திருமுருகன் பதிப்பகம்
வேலூர் (வ. ஆ.)



# முன்னுரை

ஆறும் வகுப்பிற் பயிலும் இள மாணவர்கள் உளப் பாங்கிற்கு ஏற்ப, இச்சிறு நூலில் ஐந்து கதைகள் கூறப்பட்டிருக்கின்றன.

இக்கதைகளுள், நீயே உன்னை எண்ணிப் பார், ஆறடிக்கு மேல் நிலமேன் ?, இறைவனில்லா இடம் எது ? என்பவை உலகப் புகழ் பெற்ற லியோ தால்ஸ்தாய் என்னும் உருசிய மேதையின் சிறு கதைகளைத் தழுவி எழுதப்பட்டவை யாகும். பொதுவாக இந்நூலில் இடம்பெற்றுள்ள கதைகள், பல வகைச் சுவைகளை ஊட்டத் தக்கனவாயும், மாணவர்களை நற்பண்பில் ஈர்த்துச் செல்வனவாயும், மனநிலையை உயர்த்தக் கூடியனவாயும் அமைந்துள்ளன.

இச்சிறு கதைகள் இளம் மாணவர்கள் எளிதில் படிப்பதற்கேற்றவாறு எளிய இனிய நடையில் எழுதப் பட்டிருக்கின்றன. இக்கதை நூலை மாணவர்க்குப் பயன் படச் செய்யுமாறு கல்வித் துறையினரை வேண்டு கிறேன்.

பு. செல்வராசன்.

# உள்ளுறை

# 1. நீயே உன்னை எண்ணிப்பார்!



மணிமங்கலம் என்னும் சிற்றூரில் மணிவண்ணன் எனும் பெயருடைய குடியானவன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் உழைப்பைப் பெரிதென மதிப்பவன்; வீணிற் பொழுது போக்குவதை விரும்பாதவன். அவனுக்கு மூன்று புதல்வர் இருந்தனர். மூத்த புதல்வனுக்கு மணமாகியிருந்தது. இரண்டாம் மகன் மணப்பருவத்தை அடைந்திருந்தான். மூன்றும் மகன் படித்துக் கொண்டிருந்தான்.

மணிவண்ணன் வீட்டில், உழைக்காமல் உண் பவர் அவன் தந்தை ஒருவரே. அவருக்கு வயது எழுபதுக்கு மேலாகிவிட்டது. காசநோய் அவரைப் பீடித்திருந்தது. வேளாவேளைக்கு உண்பதும் உறங்கு வதுமாக அவர் காலங் கழித்தார்.

மணிவண்ணனும் அவன் புதல்வர் இருவரும் வயலில் நன்ருக உழைத்தனர். மூன்ரும் புதல்வன் படிக்கும் நேரம் தவிர, மற்ற வேலைகளில் தந்தைக்கு உதவியாய் இருப்பான். வீட்டுப் பெண்களுக்கும் வேலை சரியாய் இருந்தது. மணிவண்ணன் வீட்டில் கோழிப்பண்ணை இருந்தது. பசுக்கள் மூன்று இருந்தன. எருமைகள் சில இருந்தன. ஓர் ஆட்டு மந்தை இருந்தது. அந்தச் சிற்றூரில் மணிவண்ணன் நிலபுலங்களும் ஆடு மாடுகளும் உடையவனுய் வாழ்ந்து வந்தான்.

மணிவண்ணனின் குடும்ப வாழ்வில் கவலை அற்றவனுக இருந்தும், ஒரே ஒரு குறை அவனைப் பெருங்கவலைக் குள்ளாக்கிக் கொண்டிருந்தது. அவ னுடைய அண்டை வீட்டில் வாழ்ந்தவன் முத்து என்பவன். அவனும் குடியானவனே. உழுதொழில் புரிந்து உண்பவனே.

மணிவண்ணனும் முத்தும் அண்டை வீட்டின ராயிருந்தும், பகைவர்களாகவே வாழ்ந்தனர். சின்னஞ்சிறு செயல்களுக்கெல்லாம் இவ்விரு குடும் பத்தினரும் சண்டையிட்டுக் கொள்வார்கள்.

மணிவண்ணனின் தந்தை காலத்திலும் இவ் விரு குடும்பத்தினரும் அண்டை வீட்டவர்களாகவே

வாழ்ந்து வந்தனர். ஆனல், அக்காலத்தில் இவ்விரு வீட்டாரும் ஒரே குடும்பத்தினரைப் போன்ற ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்தனர். ஒருவர் வீட்டில் ஏதேனும் குறைந்தால், மற்றவர் கொடுத்துதவுவார். ஒரு வீட்டாருக்குப் பிணியோ, வேறு வகைத் துன்பமோ ஏற்பட்டால், மற்ற வீட்டார் உடனிருந்து உதவி செய்வர். இவ்வாறு எல்லாத் துறையிலும் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்பவர்களாக, இரு வீட்டாரும் மிக்க ஒற்றுமை உடையவர்களாய் அன்புடன் வாழ்ந்து வந்தார்கள். தந்தையர் காலத்தில் இவ்வளவு ஒற்றுமையாக, அன்பாக வாழ்ந்த குடும்பங்கள், மக்கள் காலத்தில் பாம்பும் கீரியுமெனப் பகைகொண்டு வாழக் காரணமென்ன ?

கோழிகளைக் கவனித்துக் கொள்வதும், அவை இடுகின்ற முட்டைகளைச் சேர்த்து வைப்பதும் மணிவண்ணனின் மருமகள் பொன்னி செய்ய வேண்டிய வேலை. தன் வேலையைப் பொன்னி ஒழுங்காகச் செய்துவந்தாள்.

ஒரு நாள் கோழிகளுள் ஒன்று இட்ட ஒரு முட்டை காணப்படவில்லை; பொன்னி தன் மாமியையும், மைத்துனர்களையும், கணவனையும் அது பற்றிக் கேட்டபோது, அதனைப் பார்க்க வில்லையென்று அவர்கள் கூறிவிட்டார்கள்.

அக்கோழி வேலியைத் தாண்டிப் பறந்துபோய் அண்டை வீட்டில் முட்டையிட்டு விட்டிருக்கலாம் என்று பொன்னி கருதினள்; உடனே அண்டை வீட்டிற்குச் சென்றாள். முத்தின் மனைவி வள்ளி

பொன்னியைப் பார்த்து, "என்ன அம்மா வேண்டும் ?" என்று கேட்டாள்.

**பொன்னி :** ஒன்றுமில்லை அம்மா ! எங்கள் கோழி ஒன்று இங்கு வந்து முட்டையிட்டு விட்டது. அதனை வாங்கிப் போகவே வந்தேன்.

**வள்ளி :** ஐயோ ! உங்கள் வீட்டுக் கோழி இங்கு முட்டையிட்டதை நான் பார்க்க வில்லையே ! எங்கள் வீட்டுக் கோழி இடும் முட்டைகளையே ஒழுங்காக எங்களால் சேர்த்து வைக்க முடிய வில்லையே ! பிறர் வீட்டு முட்டை எங்களுக்கேன் ? எங்கள் முட்டைகளைப் பிறர் எடுத்துச் செல்லாம லிருந்தால் போதாதா ! நாங்கள் ஏன் பிறர் முட்டை களுக்கு ஆசை வைக்கப் போகிறோம் ?

இவ்வாறு வள்ளி கூறியது பொன்னிக்கு ஆத்திரம் உண்டாக்கி விட்டது. "அப்படியானால், நாங்கள் மட்டும் பிறர் வீட்டு முட்டைகளுக்கு ஆசைப்படுகிறோமா ?" என்று போருக்குக் கொடி ஏற்றினாள். வள்ளியும் அதற்குத்தக்க மறுமொழி கூறினாள்.

இவ்வாறு அவ்விருவரும் சொற்களை அள வில்லாமல் கொட்டி, பண்பிழந்து, கீழ் மக்களைப் போல இழிசொற்கள் பேசி ஏசிப் பெருங்கூச்சலுடன் சண்டையிட்டுக் கொண்டனர்.

அவ்வமயம், குடத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு அவ்வழியே வந்த மணிவண்ணனின்

மனைவி, சண்டையைப் பார்த்துக் குடத்தைக் கீழே இறக்கி வைத்துவிட்டுப் பொன்னிக்கு உதவியாக வந்து வள்ளியை வாய்க்கு வந்தபடி ஏசத் தொடங்கினுள். இதற்குள் முத்தின் மகளும் வந்து சண்டையில் கலந்து கொண்டாள். எனவே, இருதரப்பினரும் மனம்போன போக்கில் பல பழிகளை ஒருவர் மேல் ஒருவர் கூறிப் பெருஞ் சொற்போர் நடத்தினர்.

" சல்லடை கூட வாங்க வழியற்ற கழுதை! எங்களிடம் இரவலாக வாங்கிச் சென்ற சல்லடையையும் ஒழுங்காகத் திருப்பித் தரத் தெரியாமல் சில்லியாக்கிக் கொடுத்த பீடை !"

" தண்ணீர் சுமந்து வரும் குடம் நாங்கள் இரவலாகக் கொடுத்ததுதானே ! அதை வாங்க உனக்குக் கதியிருக்கிறதா ?"

இப்படிப் பேசியவள் குடத்திலிருந்த தண்ணீரைக் கவிழ்த்துக் குடத்தைப் பிடுங்கிக் கொண்டாள். குடத்தைப் பிடுங்கியவளின் கூந்தலைப் பிடித்து இழுத்துத் தள்ளினுள் ஒருத்தி. இவ்வாறு வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாறியது.

அவ்வமயம் வயலில் வேலை செய்துவிட்டு முத்து வீட்டுக்கு வந்தான். வீட்டில் தன் மனைவியும் மகளும் அண்டை வீட்டுப் பெண்களுடன் சண்டையிடுவதைக் கண்டு, தன் மனைவி சார்பில் சேர்ந்து ஏசத் தொடங்கினுன். முத்தைப் போலவே, வயலில் வேலை செய்து விட்டுத் தன் இல்லம் வந்து சேர்ந்த மணிவண்ணன் முத்தை ஏசினுன். பின் இருவரும்

அடித்துக் கொள்ளத் தொடங்கினர். மணிவண்ணன் வலியவனுகையால் முத்தை நன்கு உதைத்துக் கீழே தள்ளிப் புரட்டினுன். இதற்குள் இப்பெருங் கூச்சலைக் கேட்ட ஊரார் சிலர் அங்கே வந்து, பெருமுயற்சியின் மீது அவ்விருவரையும் பிரித்துச் சண்டையிடாதபடி தடுத்தனர்.

அது முதல் இவ்விரு குடும்பத்தினரும் கொடும் பகைவராயினர். முத்து காவல் நிலையம் சென்று மணிவண்ணன் தன்னைக் கடுமையாக அடித்து விட்டதாக முறையிட்டான். முத்தின் மனைவியாகிய வள்ளி வீடு வீடாகச் சென்று, தன்னையும் தன் கணவரையும் மணிவண்ணனும் அவன் வீட்டுப் பெண்களும் அடித்து விட்டதாகவும், காவல் நிலையத்தில் வழக்குப் பதிவு செய்திருப்பதாகவும், விரைவில் மணிவண்ணன் சிறைக்குச் செல்வா னென்றும் புறங்கூறித் திரிந்தாள். இதனுல் இவ்விரு குடும்பத்தினருக்கு மிடையே மேலும் பகைமை வளரலாயிற்று.

இவ்விரு குடும்பத்தினரும் இவ்வாறு வாழ்வது மணிவண்ணனின் தந்தையாருக்குப் பிடிக்க வில்லை. அவர் எவ்வளவோ சொல்லிப்பார்த்தும் வீட்டுப் பெண்களோ, மகனோ அவர் சொற்களைக் கேட்கவில்லை.

ஒரு நாள் அவர் மணிவண்ணனை அழைத்து, “மகனே, நீங்கள் இவ்வாறு அண்டை அயலா ருடன் சண்டையிட்டுக் கொண்டு வாழ்வது எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை. உங்கள் சண்

டைக்கு அடிப்படைக் காரணம் என்ன ? ஒரே ஒரு கோழிமுட்டை. அந்த முட்டையைக் குழந்தைகள் எடுத்து உடைத்து விட்டிருக்கலாம். அக்கோழி வேறெங்காவது அம் முட்டையை இட்டிருக்கலாம். வேறு எவராவது எடுத்துச் சென்றிருக்கலாம். அதன் விலை என்னவாகிவிடப் போகிறது ! அண்டை வீட்டுக்காரர் ஒரு முட்டை வேண்டுமென்று நம்மிடம் கேட்டிருந்தால் நாம் கொடுத்து விட்டிருக்க மாட்டோமா ? நமக்கு இறைவன் போதுமானவற்றை அளித்திருக்கின்றார். அண்டை வீட்டுக்காரர் தவருகப் பேசி விட்டார்கள் என்றே வைத்துக் கொள்வோம். அந்த நேரத்தில் பொறுமையாக இருக்க முடியாதா ? அப்படிப் பேசியிருக்கக்கூடாது என்பதைக் கோபம் தணிந்தபின், அவர்களிடம் எடுத்துக்கூறி அவர்களைத் திருத்தி விடலாமல்லவா ?

"கேவலம் ஓர் அற்ப முட்டைக்காகவா இவ்வளவு பெரிய சண்டை ! அதன் பின்னரும் தொடர்ந்து தொல்லை ! குறையில்லாதவர்களோ, குற்றம் செய்யாதவர்களோ எவர் ? ஒருவர் கோபமாயிருக்கும் போது மற்றவர் தணிந்து போனல் சண்டை வர இடமே யில்லையே ! அதை விட்டுக் கோபத்தீயை வளர்த்தீர்களானல் அஃது உங்கள் அனைவரையும் தீய்த்து விடுமே! எனவே, நடந்தவற்றை மறந்து மீண்டும் நீங்கள் இரு வீட்டாரும், ஒற்றுமையுடன் வாழ்வீர்களாக," என்று கூறினர். ஆனல், அவர் அறிவுரைகளை எவரும் கேட்கவில்லை.

மணிவண்ணனும் காவல் நிலையம் சென்று தன் சட்டையைக் கிழித்துத் தன்னை முத்து அடித்து விட்டதாக முறையிட்டுக் கொண்டான்.

ஒரு நாளாவது இந்த இரண்டு வீட்டுக்கார ரும் சண்டையில்லாமல் இருந்ததில்லை. இவ்விரு வீட்டுச் சிறுவர்களும் தங்கள் பெரியவர்களைப் பார்த்து ஏசவும் பேசவும் பழித்துக் கூறவும் கற்றுக் கொண்டார்கள் ; 'முன்னோர் போகும் வழிதானே பின்னோரும் செல்லும் !'

இவ்விரு குடும்பத்தினரும் தொடுத்த வழக்கு கள் அளவு கடந்து விடவே, நீதிபதிகளும் மாறி மாறி முத்தையும் மணிவண்ணனையும் தண்டித் தனர். எனினும் ஓயாமல் வந்து கொண்டேயிருந்த இவர்களுடைய வழக்குகளைக் கண்டு அவர்களும் அலுத்து விட்டார்கள்.

தண்டனை பெறப்பெற இவ்விரு தரப்பாரும் வெறி நாய்களைப் போலக் கடும் பகையே கொண்ட னர். ஆறு ஆண்டுகள் இவ்வாறு இரு குடும்பத் தினரும் கடும்பகை கொண்டு நீதி மன்றமும், காவற் கூடமும், சிறையும், வீடுமாக அலைந்து கொண்டிருந் தனர். ஏழாவது ஆண்டில், அவ்வூரில் நடந்த திரு மண மொன்றில் அனைவரும் கூடியிருந்தனர். மணி வண்ணனின் மனைவி அத்திருமண வீட்டில் முத் தைப் பார்த்ததும், அவன் ஒரு பசுவைத் திருடி, அதற்காகச் சிறைத் தண்டனை யனுபவித்து விட்டு வந்திருப்பதாக அனைவரிடமும் கூறத் தொடங்

கினுள். இதைக் கேட்டு ஆத்திர மடைந்த முத்து அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டான். ஏழுமாதச் சூல் கொண்டிருந்த அவள் மயங்கி விழுந்து ஒருவாரம் படுக்கையில் கிடந்தாள். மணி வண்ணன் இது கேட்டு மகிழ்ந்தான்; முத்தைப் பல நாட்கள் வரை சிறையில் தள்ள இது நல்ல வாய்ப்பு என்று எண்ணிக் காவல் நிலையத்திற்கு ஓடி உடனே வழக்குப் பதிவு செய்தான். வழக்கு நடந்தது. முத்து குற்றவாளி என்று நீதி மன்றம் தீர்ப்பு அளித்தது.

முத்துவுக்கு இருபது கசையடிகள் கொடுக்க வேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. இதைக் கேட்ட மணிவண்ணன் மனம் குளிர்ந்தான். நீதி மன்றத்தை விட்டு முத்து வெளிவரும்போது, "கசை யடிகளால் என் முதுகைப் புண்ணுக்கும் இதைவிடக் கடுமையாக அவன் துன்புறுமாறு ஒரு நெருப்பு விழா நடத்துகிறேன்" என்று கூறிக்கொண்டே சென்ருன்.

மணிவண்ணன், அவன் கூறியதைச் சட்டை செய்யாமல் தன் வீடு வந்து சேர்ந்தான். மணி வண்ணனின் தந்தை தம் மகனை அருகிலழைத்து நீதி மன்றத்தில் நடந்தவற்றைப்பற்றிக் கேட்டார். "முத்து இருபது கசையடி பெறுவான்" என மகிழ்ச்சியோடு மணிவண்ணன் கூறினுன்.

"ஐயோ! மணிவண்ணு அவன் கசையடி படு வதால் நீ அடையும் ஆதாயம் என்ன அப்பா? இது மிகவும் கொடுமை யப்பா!" என்ருர் அவன் தந்தை.

“ அப்பா அவன் மீண்டும் என் வம்புக்கு வரமாட்டான். அதுதான் எனக்கு ஆதாயம் ” என்ருன் மணிவண்ணன்.

“ தம்பி நான் சொல்வதைக் கவனி. பகைமை உணர்ச்சி உன் கண்களைக் குருடாக்கிவிட்டன. நீ பிறருடைய குற்றங்களை மட்டுமே காண்கிருயே ஒழிய உன் குற்றங்கள் உனக்குத் தெரியவில்லை. “ ஏதிலார் குற்றம் போல் தன் குற்றம் காண்கிற்பின் தீதும் உண்டோ மன்னும் உயிர்க்கு ?” என்னும் வள்ளுவர் மொழி உனக்கு தெரியாதா?

“ அவன் தவருக நடந்தான் என்கிருய். அப்படியே இருக்கட்டும். அவன் மட்டும் தவருக நடந்திருந்தால் சண்டை எப்படி வரும் ? ஒரே ஒருவனுல் சண்டை உண்டாகி விடுமா ! இரண்டு பேர் சேர்ந்தால் தானே சண்டை வரும்? அவன் கெட்டவனுகவே இருக்கட்டும். நீ நல்லவனுய் நடந்தால் சண்டை வருமா ? சிந்தித்துப் பார். பெண்கள் எதிரில் அவனை மண்ணில் தள்ளிப் புரட்டிப் புரட்டி உதைத்தது யார் ? அவன் வைக்கோல் போர்களை எரித்து நாச மாக்கியது யார் ? அவன்மீது வழக்குப் போட்டு அவனை நீதிமன்றம் வரை இழுத்துச் சென்று தண்டனை பெறும்படி செய்தது யார் ? ”

“ தம்பி நானும் முத்தின் தந்தையும் அண்டை வீட்டுக்காரர்களாகத்தான் வாழ்ந்தோம். நாங்கள் ஒரு நாள்கூடச் சண்டையிட்டதில்லை. நாங்கள் ஒரே குடும்பத்தினர் போல் வாழ்ந்தோம். அவர் வீடு என் வீடு போலவும், என் வீடு அவர் வீடு போலவும்

இருந்தன. நீ குழந்தையாக இருந்தபோது உன்னை அழவிடாமல் பல நாட்கள் தூக்கிச் சுமந்து வளர்த்தவர்கள் முத்துவின் தந்தையும் தாயுமாவர். அதே போல் அவனை நான் அன்போடு தூக்கி வளர்த்திருக்கிறேன். நாங்கள் உறவு முறையினர் என்றே வெளியில் இருப்பவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள்.''

"எங்கள் வயிற்றில் பிறந்த நீங்கள் குழந்தைகளாக வளரும்போது அண்ணன் தம்பிகளைப்போல அன்புடன் வளர்ந்து, இப்போது பெரியவர்களாகிவிட்டபின் பூனையும் நாயும் போல வாழ்கின்றீர்கள். இதுவா வாழ்க்கை? நீயோ குடும்பத்திற்குத் தலைவன். நீதான் எல்லாவற்றுக்கும் பொறுப்பு ஏற்க வேண்டியவன். வீட்டுப் பெண்களையும் பிள்ளைகளையும் அடக்கி வைத்து ஒழுங்கு படுத்த வேண்டியது உன் பொறுப்பு. அதை விட்டுச் சாக்கிட்டுப் பேசவும், சண்டைக் கிழுக்கவும், பழி கூறித் திரியவும், வலுச்சண்டை பிடிக்கவும், அடித்துக் கொள்ளவும் இடங்கொடுக்கலாமா? அப்படி அவர்கள் செய்யும் போதெல்லாம் நீ கண்டிக்க வேண்டும் அல்லவா? அவர்கள் ஒன்று சொன்னால் இரண்டாகத் திருப்பிச் சொல்வது, ஓர் அடி கொடுத்தால் இரண்டு அடியாகத்திருப்பிக் கொடுப்பது, இப்படியா செய்வது? "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்'', என்றும் "இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு!'' என்றும் திருவள்ளுவர் பெருமான் கூறி உள்ள மறை

மொழிகளைச் சிந்தித்துப் பார். வள்ளுவர் பெருமான் காட்டும் அறவழியில் நட" என்று கூறினர்.

மணிவண்ணனுக்குத் தந்தையார் கூறியது சரியெனப் பட்டது. இரவு அனைவரும் உண்டு உறங்கி விட்டனர். அவனுக்குத் தூக்கம் வரவில்லை. தோட்டத்தில் ஒரு மரத்தடியில் இருட்டில் உட்கார்ந்து கொண்டு தன் தந்தை கூறிய அறிவுரைகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். அவ்வமயம் எவரோ, தன் வைக்கோல் போரில் தீயிடுவதை மணிவண்ணன் பார்த்து விட்டான். பாய்ந்தோடித் தீயிட்டவனைப் பிடித்துக் கொண்டான்.

யார் தீயிட்டது? முத்தேதான். முத்தைப் பார்த்தவுடன் தன் தந்தை கூறிய நல்லுரைகளை எல்லாம் மணிவண்ணன் மறந்து விட்டான். சினம் அவனிடம் தலை தூக்கி நின்றது. முத்து இனித் தப்பிவிட முடியாது என்று எண்ணிய மணிவண்ணன் அவனைப் பிடித்திழுத்தான். முத்து அவன் பிடியிலிருந்து நழுவி ஓடி விட்டான். மணிவண்ணன் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினன். இதற்குள் வைக்கோல் போர் அணைக்க முடியாதபடி தீப்பிடித்துக்கொண்டது. அதனல் மணிவண்ணன் வீடு, முத்து வீடு, அந்தச் சிற்றூரில் இருந்த இன்னும் இருபது வீடுகள் எரிந்து சாம்பலாயின. மணிவண்ணன் வீட்டில் இருந்தவர்கள் கையிற் கிடைத்தவற்றை யெல்லாம் சுருட்டிக் கொண்டு உயிர் தப்பினல் போதுமென்று வெளியே ஓடி வந்தனர். தீ வைத்த முத்து வீட்டாருக்கும் இதே கதி ஏற்பட்டது.

மணிவண்ணனின் தந்தையார் இதைக் கேட்டு அதிர்ச்சி யடைந்து மரண நிலை யடைந்தார்; உயிர் பிரியும் அத் தறுவாயில் தம் மகனை அழைத்தார்.

"மகனே, யார் வைக்கோற் போரில் தீயிட்டது?" என்று கேட்டார். தந்தையே அடுத்த வீட்டு முத்து தான் தீவைத்தான். தீவைத்த போது அதை நான் நேரில் கண்டேன். உடனே ஓடி அவனைப் பிடித்துக் கொண்டேன். ஆனால் அவன் தப்பி ஓடி விட்டான். நான் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினேன்," என்றான் மணிவண்ணன்.

" நீ அவனைத் துரத்திக் கொண்டு அவன் பின்னால் ஓடாமல் விட்டு விட்டு உடனே தீயை அணைத்திருந்தால், ஒரு சிறு சேதமும் உண்டாகியிராதே! இப்பொழுது நம் ஊரில் பாதி சாம்பலாகி விட்டதே! இது யார் குற்றம்? மகனே யார் குற்றம்? நான் சாகப் போகிறேன். நீ சிந்தித்துப் பார் " என்றார் தந்தை.

தந்தையின் உருக்கமான அறிவுரைகளைக் கேட்ட மணிவண்ணன் அழுதுவிட்டான். அவன் மனம் மாறி விட்டது. " தந்தையே குற்றம் என்னுடையதுதான். உடனே அணைத்திருந்தால் கைப்பிடி வைக்கோல் கூட எரிந்திராது. உமக்கு முன்னும் இறைவனுக்கு முன்னும் நான் குற்றவாளியே. தந்தையே என்னை மன்னித்து விடுங்கள்!" என்று கூறி மணிவண்ணன் அழுதான்.

" மணிவண்ணு அறநெறிப்படி நட. வள்ளுவர் வகுத்த சட்டத்தை மீருதே; இறைவனுக்கு அஞ்சு; இப்போது நீ என்ன செய்யப் போகிருய்? " என்று கேட்டார் அத்தந்தை.

மணிவண்ணன் (அழுது கொண்டு) " எப்படி வாழப் போகிறேமென்பது விளங்க வில்லை அப்பா!" என்ருன்.

" மணிவண்ணு! அழாதே! இனிமேல் இறைவனுக்கு அடிபணிந்து நட. முன்னை விடச் சிறப்பாக வாழ்வாய். யார் தீ வைத்தது என்பதை எவரிடமும் சொல்லாதே. பிறர் குற்றம் ஒன்றினை நீ மறைத்து வைத்தால் இறைவன் உன் குற்றங்கள் இரண்டினை மன்னிப்பார் என்பதை மறந்து விடாதே!" என்று சொல்லிக் கொண்டே பெரியவர் உயிர் துறந்தார்.

மணிவண்ணன் தீயிட்டவர் எவரென எவரிடமும் கூற வில்லை. ஏன் தீப்பற்றியது என்பது எவருக்கும் தெரியாமற் போயிற்று. தன் தீச் செயலைப் பற்றி எவரிடமும் மணிவண்ணன் கூருதது பற்றி முத்து பெரிதும் வியப்படைந்தான். முதலில் அவன் பெரிதும் அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்தான். ஆனல், மணிவண்ணன் எவரிடமும் இது பற்றி ஏதும் சொல்லாமலிருந்து விடவே, அவன் மனம் மாறி விட்டது. ஒரு வாரம் ஆகியும் மணிவண்ணன் தீயைப்பற்றித்தான் அறிந்த உண்மையை எவரிடமும் கூருமற் போகவே முத்து ஒரு நாள் மணிவண்ணனைத்தனியே சந்தித்து மன்னிப்பு வேண்டினன்.

இருவர் கண்ணிலும் நீர் புரள, இருவரும் கட்டித் தழுவிக் கொண்டனர். அன்று முதல் பகைமையை மறந்தனர். பின் இருவர் குடும்பமும் ஒரே குடிசையில் ஒன்ருகச் சில நாட்கள் வாழ்ந்தனர். பிறகு முன் போலவே அருகருகாக இருவரும் புதிய வீடுகள் கட்டிக் கொண்டனர். அவர்களுடைய தந்தைமார் வாழ்ந்தது போலவே அவர்களும் ஒற்றுமையாகவும் அன்பாகவும் வாழ்ந்தார்கள்.

## பயிற்சி

1. குற்றம் வளரும் வகை.
2. மணிவண்ணனின் தந்தையார் கூறிய அறிவுரை.
3. அன்பின் சிறப்பு.
4. இக்கதையைச் சுருக்கி எழுதுக.
5. இக்கதையை முத்து சொல்வது போல் எழுதுக.

(மேலே உள்ளவை ஒவ்வொன்று பற்றியும் இரண்டு பக்கங்களுக்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை எழுதுக.)

## 2. பாரதநாடு எனக் கூறுவதேன்?




" பாரத தேசமென்று பெயர் சொல்லு வார்மிடிப்
பயங் கொல்லு வார்துயர்ப் பகைவெல்லுவார் "

" பாரத நாடு பழம் பெரு நாடே
பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே "

" பாரிலுள்ள பலநாட் டினர்க்கும்
பாரத நாடு புது நெறி பழக்கல்
உற்றதிங் கிந்நாள் "

" பாரத சமுதாயம் வாழ்கவே — வாழ்க வாழ்க
பாரத சமுதாயம் வாழ்கவே — ஜய ஜய ஜய "

" வாழிய பாரத மணித்திரு நாடு "

" பாரத நாடு பாருக் கெலாம் திலகம்
நீரதன் புதல்வர் இந்நினைவகற் றுதீர்"

"பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர் இந்நினைவகற் றுதீர் "

" பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரத நாடு "

என்றெல்லாம் பாரதியார் நம் நாட்டைப் பாரத நாடு என்று கூறிப் புகழ்ந்து பாடியிருக்கிறார். நம் நாட்டுக்குப் பாரத நாடு என்று ஏன் பெயர் வந்தது ?

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இருஷபர் என்ற முனிவருக்கும் அவர் மனைவியாகிய சயந்திக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்குப் பரதன் என்று பெயர் வைக்கப்பட்டது.

பரதன் வளர்ந்து வருகையில், தம் தந்தையாகிய இருஷப முனிவரிடம் எல்லாக் கலைகளையும் நன்கு கற்றார். ஞானமும் வீரமும் அவரிடம் சிறந்திருந்தன. அவர் ஒரு முனிவருக்குரிய ஞானமும் பெற்றிருந்தார்; அரசனுக்குரிய வீரமும் பெற்றிருந்தார். எனவே, மக்கள் இருஷப முனிவரின் மகனாகிய பரதரை அரசராக்கிக் கொண்டார்கள். இவர் பல ஆண்டுகள் அரசாண்டார். பிறகு மகரிஷி புலகரின் ஆச்சிரமத்திற்குச் சென்று யோகத்தில் அமர்ந்தார். இவரைச் சட பரதர் என்றும் கூறுவார்கள். இவர் ஆண்டதால் இந் நாடு பரதகண்டம் அல்லது பாரத நாடு என்னும் பெயரைப் பெற்றது.

நம் நாடு பாரத நாடு என்று கூறுவதற்கு மற்ருெரு கதையும் கூறப்படுகிறது. அதைக் கீழே படிப்போம்:

கச்யபர் என்னும் மாமுனிவரின் மாணவர் கண்ணுவர் என்பவர். இவர் காட்டில் ஆசிரமம் அமைத்துத் தவம் செய்து வந்தார். ஒரு நாள் அவர் நீராடிவிட்டு ஆசிரமத்திற்குத் திரும்பினுர். வழியில் ஒரு சிறு அழகான பெண் குழந்தை தரையில் கிடந்து அழுது கொண்டிருந்ததைப் பார்த்தார்; சகுந்தலப் பறவைகள் அக்குழந்தையின் மீது கதிரவனின் ஒளிக்கதிர்கள் படா வண்ணம் தம் அழகிய சிறகுகளை விரித்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார்.

கண்ணுவர் அதன் அருகில் சென்று அக்குழந்தையை எடுத்தார். அக்குழந்தையைத் தம்முடைய ஆசிரமத்திற்கு எடுத்துச் சென்று அக்குழந்தைக்குச் சகுந்தலை என்று பெயரிட்டார்; அக்குழந்தையை அன்போடு வளர்த்து வந்தார். அவள் வளர்ந்து அழகிய மங்கை ஆனுள்.

அந்தக் காட்டையும் அதை அடுத்திருந்த நாட்டையும் துஷ்யந்தன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் அடிக்கடி காட்டிற்குச் சென்று, காட்டில் வாழும் கொடிய விலங்குகளை வேட்டை ஆடுவான். அவன் மிகவும் நல்ல அரசன்; குடிமக்களிடம் அன்புடன் நடந்து கொண்டான். அவன் நாட்டை நீதி வழுவாது ஆண்டு வந்தான்.

ஒரு முறை துஷ்யந்தன் காட்டில் வேட்டை ஆடியபின் களைத்து, ஒரு மரத்தடியில் அமர்ந்து இளைப்பாறினன்; பிறகு எழுந்து உலாவலானன்.

அவன் தங்கிய இடம் கண்ணுவ முனிவரின் ஆசிரமம் அமைந்திருந்த இடமாகும். அப்பொழுது சகுந்தலை தன் ஆசிரமத்தின் சோலையில் பூப் பறித்துக் கொண்டு இருந்தாள். உலாவிக் கொண்டிருந்த துஷ்யந்த மன்னன் ஒரு மானைக் கண்டு அதைத் துரத்திக் கொண்டு ஓடி ஆசிரமச் சோலைக்குள் புகுந்தான்; அங்கே பூப் பறித்துக் கொண்டிருந்த சகுந்தலையைக் கண்டான்.

அப் பெண் யார் எனக் கேட்டான். அவள் விசுவாமித்திரருக்கும் மேனகை என்பவளுக்கும் பிறந்த பெண் என்பதையும், கண்ணுவ முனிவர், சிறு குழந்தையாக இருந்த அவளை எடுத்து வளர்த்து வருகிறுர் என்பதையும் தோழிகள் கூறத் தெரிந்து கொண்டான்.

துஷ்யந்தன் சகுந்தலையைக் கண்டு பேசினன். இருவரும் கந்தர்வ மணம் செய்து கொண்டனர். பிறகு ஒரு நாள் துஷ்யந்தன் தன் பெயருள்ள மோதிரம் ஒன்றை அவளிடம் கொடுத்தான். குறித்த நாளில் வந்து அவளை அரண்மனைக்கு அழைத்துப் போவதாக உறுதி கூறிவிட்டு அவளிடம் விடை பெற்றுக் கொண்டு தன் நாட்டிற்குச் சென்றுன்.

நாட்டிற்குச் சென்ற துஷ்யந்தன் குறித்தநாளில் வரவில்லை. அவன் சகுந்தலையை மறந்து விட்டான்; காரணம் அவன் கவனம் முழுவதும் நாட்டை ஒழுங்காக ஆட்சி செய்வதிலேயே இருந்தது.

துஷ்யந்தன் வராமற்போகவே சகுந்தலைக்குக் கவலை உண்டாயிற்று. கண்ணுவர் சகுந்தலையின் கவலையைப் போக்க எண்ணினார். சகுந்தலையைத் தகுந்த துணையுடன் துஷ்யந்தனிடம் அனுப்பி வைத்தார்.

சகுந்தலை இரண்டு தோழிகளுடன் கண்ணுவரின் மாணவர்கள் இருவரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு துஷ்யந்தனின் நாட்டை நோக்கிப் புறப்பட்டாள். அவள் காட்டைக் கடந்து வந்து கொண்டிருந்தாள். வழியில் அவளுக்குத் தாகம் உண்டாயிற்று. அங்கிருந்த குளம் ஒன்றில் இறங்கி அவள் தண்ணீர் அள்ளிக் குடித்தாள். அச்சமயம் அவள் விரலில் இருந்த துஷ்யந்தனின் மோதிரம் நழுவித் தண்ணீரில் விழுந்துவிட்டது. அவள் அதைக் கவனிக்கவில்லை.

பிறகு, சகுந்தலை தன் துணைவர்களுடன் அரண்மனை போய்ச் சேர்ந்தாள். தன் வருகையை அரசனுக்குத் தெரிவித்தாள்.

துஷ்யந்தன் அவர்களை வரவேற்று, " நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

சகுந்தலையை அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் துஷ்யந்தனைப் பார்த்து, " ஆசிரமச் சோலையில் நாம் சந்தித்ததை மறந்துவிட்டீர்களா? எனக்கு மோதிரம் கொடுத்துவிட்டு வந்தது நினைவில் இல்லையா? குறித்த நாளில் ஆசிரமத்திற்கு வந்து

என்னை அரண்மனைக்கு அழைத்து வருவதாகக் கொடுத்த வாக்குறுதி நினைவிலில்லையா? " என்று கேட்டாள்.

ஆனால் துஷ்யந்தனுக்கு ஒன்று கூட நினைவில் இல்லை. ஆசிரமச் சோலையில் நடந்தவற்றை எல்லாம் அவன் அடியோடு மறந்துவிட்டான். அவளையே அவன் அடியோடு மறந்து விட்டான். மோதிரத் தைப்பற்றிச் சகுந்தலை கூறவே, துஷ்யந்தன் அந்த மோதிரத்தைக் காட்டும்படி கூறினான். ஆனால், சகுந்தலை தன் விரலில் மோதிரம் இல்லை என்பதை அப்பொழுதுதான் அறிந்தாள். அது வழியில் குளத்தில் தான் தண்ணீர் குடித்தபோது நழுவி விழுந்து விட்டிருக்கும் என்று கூறினாள். ஆனால் மோதிரம் இல்லாததை அறிந்த துஷ்யந்தன் அவள் கூறிய எதனையும் நம்பவில்லை.

சகுந்தலை, தான் குழந்தைக்குத் தாயாகும் நிலையில் இருப்பதாயும், இப்படித் தன்னைக் கைவிடு வது பாதகச் செயல் என்றும் கூறினாள். அவளுடன் வந்த மற்றவர்களும் அவள் நிலையை விளக்கி, அவளைப் பழிக்கு ஆளாக்க வேண்டாம் என்று வேண்டிக் கொண்டனர்.

துஷ்யந்தன் அவர்கள் கூறியதை நம்பவில்லை. அவர்கள் தன்னை ஏமாற்றுவதாகவே அவன் நினைத் தான். அரண்மனையை விட்டு அவர்களை வெளியேறு மாறு சொல்லிவிட்டு, அவன் கோபத்தோடு உள்ளே சென்று விட்டான். சகுந்தலை தன்னை மறந்துவிட்ட துஷ்யந்தனின் போக்கை எண்ணி வருந்தினாள்.

அவளுடன் வந்தவர்கள், ஆசிரமத்திற்கு அவளை அழைத்துச் செல்லவில்லை. அவளால் ஆசிரமத்திற்குப் பழிவரும் என்றுகூறி, அவளை அரண்மனை வாயிலில் விட்டு விட்டுப் போய்விட்டார்கள்.

தனியே விடப்பட்ட சகுந்தலை, அழுது புலம்பினாள். பின் தன் தாயிடம் போய்ச் சேர்ந்தாள். சில நாட்கள் கழிந்தபின், அவள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். அக்குழந்தைக்குப் பரதன் என்னும் பெயர் இடப்பட்டது. அந்தக் குழந்தை நன்கு வளர்ந்தது. காட்டில் வளர்ந்தபடியால் சிங்கம், புலி முதலியவைகளே அவனுடைய விளையாட்டுத் தோழர்கள் ஆயின. அச்சம் என்பது என்ன என்றே அறியாதபடி பரதன் வளர்ந்து வந்தான்.

ஒருநாள் துஷ்யந்தனிடம் இரண்டு மீனவர்கள் வந்து ஒரு மோதிரத்தைக் கொடுத்தனர். “ நாங்கள் பிடித்த மீன்களுள் ஒன்றின் வயிற்றில் இந்த மோதிரம் இருந்தது. இதில் தங்கள் பெயர் பொறிக்கப்பட்டு இருக்கிறது. எனவே அரசருடைய முத்திரை மோதிரம் என்பதை அறிந்த நாங்கள் இதைத் தங்களிடம் கொண்டுவந்தோம் ” என்று கூறினர்.

மோதிரத்தைப் பார்த்தவுடன் துஷ்யந்தனுக்குச் சகுந்தலையின் நினைவு வந்துவிட்டது. வழியில் காட்டில் தண்ணீர் குடிக்கும் பொழுது, மோதிரம் நழுவித் தண்ணீரில் விழுந்து விட்டிருக்கும் என்று சகுந்தலை கூறிய சொற்கள் அவன் நினைவுக்கு

வந்தன. ஆசிரமத்தில் தான் சகுந்தலையைச் சந்தித்தது, மோதிரம் கொடுத்தது, அரண்மனைக்கு அழைத்து வருவதாகக் கூறியது ஆகிய எல்லாம் நினைவிற்கு வந்தன. சகுந்தலையை மறுத்து அனுப்பி விட்டதை நினைத்துப் பெரிதும் வருந்தினான்; தான் ஒரு பெண்ணுக்கு அநீதி செய்து விட்டதாக எண்ணி, அழுது புலம்பினான்; அதே கவலையுடன் நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் துஷ்யந்தன் காட்டில் நெடுந் தொலை சென்று திரும்புகையில், அப்பகுதியின் இயற்கை அழகுகளைப் பார்த்தபடி மெல்ல வந்து கொண்டிருந்தான். அழகு மிகுந்த சிறுவன் ஒருவன் சிங்கக் குட்டிகளைத் தூக்கி வைத்துக் கொண்டு சிங்கத்திடம் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அச்சிறுவன் சிங்கத்தின் பிடரியைப் பிடித்து இழுப்பதும் பற்களை எண்ணிப் பார்ப்பதும் வாலை பிடித்து இழுப்பதுமாக இருந்தான்.

துஷ்யந்தன், அச்சிறுவனைப் பார்த்து வியப்பு அடைந்தான். அவனை அழைத்து மடியில் உட்கார வைத்துக் கொண்டான். "தம்பி, உன்பெயர் என்ன? உன் தாய் தந்தை யாவர்? உன் வீடு எங்கே இருக்கிறது?" என்று கேட்டான். அந்தச் சிறுவன் துஷ்யந்தனைப் பார்த்து, "ஐயா என் பெயர் பரதன். என் தாய் பெயர் சகுந்தலை. என் தந்தை இங்கு இல்லை. அவரை நான் பார்த்ததும் இல்லை; என் வீடு அருகில்தான் இருக்கிறது" என்று கூறினான்.

பரதன் தன் மகன் என்பதைத் துஷ்யந்தன் தெரிந்து கொண்டான்; அவனுடன் சகுந்தலே இருக்கும் இடத்திற்குச் சென்ருன். துஷ்யந்தன் வருவதைக்கண்ட சகுந்தலே அவனே வரவேற்று வணங்கினுள். துஷ்யந்தன் அவளுக்கு ஆறுதல் கூறினுன்; நடந்தவைகளே மறந்து விடுமாறு வேண்டினுன். தன் தவறுக்காக மிகவும் வருந்தினுன்; மீனவர்கள் கொண்டு வந்து கொடுத்த மோதிரத்தைப் பார்த்தபின் தனக்கு எல்லாம் நினைவிற்கு வந்து விட்டதாகவும் அன்று முதல் துன்பத்தில் காலம் கழித்து வருவதாகவும் கூறினுன்.

சகுந்தலே தன் கணவரின் வருத்தத்தைப் போக்கினுள். இருவரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். துஷ்யந்தன் சகுந்தலேயையும் தன் மகன் பரதனேயும் அழைத்துக் கொண்டு தன் அரண்மனே வந்து சேர்ந்தான்.

பரதன் இளவரசனுனன்; எல்லாக்கலேகளேயும் கற்றுத் தேர்ந்தான். அச்சத்தை அறியாமல் வளர்ந்த பரதன் வீரத்தில் சிறந்தவனுக விளங்கினுன்.

பரதன் தக்க வயது அடைந்ததும், துஷ்யந்தன் அவனுக்கு முடி சூட்டி விட்டு, அரச பதவியிலிருந்து விலகி ஒய்வு பெற்ருன்.

பரதன் மிகச்சிறந்த முறையில் ஆட்சி செய்தான்; இந்தியா முழுவதையும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தான். அவன் ஆட்சியில் மக்கள்

எவ்விதக் குறைபாடும் இல்லாமல் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். எனவே அவன் பேரும் புகழும் நாடு முழுவதும் பரவிற்று.

அது முதல் அவன் பெயராலேயே இந்த நாடு பாரத நாடு என்று வழங்கிற்று.

எனவே நம் நாடு பாரத நாடு என வழங்கப்படுகிறது. இதற்குக் காரணமாக இருந்தவர்கள் இருவர். ஒருவர் மகரிஷியான சடபரதர். மற்றொருவர் துஷ்யந்தனின் மகனுகிய பரதன் ஆவர்.

### பயிற்சி

1. சடபரதரும் பாரத நாடும்
2, துஷ்யந்தன் கதை
3. பாரத நாட்டின் பெயர்க் காரணம்

(இவை ஒவ்வொன்று பற்றியும் இரண்டு பக்கங்கட்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை எழுதுக.)

# 3. அறிவின் பெருமை



I

விசயநகரப் பேரரசு தென்னாடு முழுவதும் பரவி இருந்தது. விசயநகர அரசர்களுள் புகழ் பெற்றவர் கிருஷ்ணதேவராயர். இவர் நீதி தவறாமல் நல்லாட்சி செய்தார். இவர் ஆட்சியில் மக்கள் குறைகள் இல்லாமல் இன்பமாக வாழ்ந்தார்கள்.

கிருஷ்ண தேவராயருடைய முதல் அமைச்சர் பெயர் அப்பாஜி. அப்பாஜி கூர்மையான நுண்ணறிவு மிகுந்தவர்.

ஒரு நாள் அரசரும் அமைச்சருமாக மாறு வேடம் அணிந்து தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட இடங்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தார்கள். அந்தக் காலத்தில் அரசர்கள் தங்கள் குடிமக்களின் நிலைமையை நேரில் கண்டறிவதற்காக இவ்வாறு சுற்றுப்பயணம் செய்வது வழக்கம்.

அரசரும் அமைச்சரும் பம்பை ஆற்றங்கரை ஓரமாக நடந்து சென்றனர். அந்த ஆற்றங்கரையை ஒட்டியிருந்த வயல்கள் எல்லாம் நன்ருக விளைந்து பச்சைப்பசேல் என்றிருந்தன. அவற்றுள் அறுவடை ஆகிக் காய்ந்து கிடந்த ஒரு வயலை உழவன் ஒருவன் உழுது கொண்டிருந்தான்.

அவ்வழியே மூன்று பெண்கள் இடுப்பில் நீர் நிறைந்த குடங்களுடன் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் உழவன் உழுது கொண்டிருந்த நிலத்தைப் பார்த்துக் கொண்டே போனுர்கள். அவர்களுள் ஒருத்தி, “நீலா, உழவன் உழுகின்ருனே, இந்த நிலம் முகத்துக்கு ஆகும்” என்று கூறினுள்.

“ தவறு தவறு கமலா. இந்த நிலம் வாய்க்கு ஆகும் ” என்று நீலா கூறினுள்.

மூன்ருவது பெண்ணுகிய சுந்தரி, “ அல்ல அல்ல. இந்த நிலம் பிள்ளைக்குத்தான் ஆகும். நீங்கள் இருவரும் கூறியது சரி அல்ல” என்ருள்.

இவ்வாறு அவர்கள் மூவரும் அந்த நிலத்தைப் பற்றிப் பேசிக் கொண்டே சென்றனர். அவர்கள்

மூவரும் கூறியவைகளை அரசரும் அமைச்சரும் கேட்ட வண்ணம் அவர்களுக்குப் பின்னுல் வந்து கொண்டிருந்தனர்.

அந்தப் பெண்கள் கூறியவை, அரசருக்கு விளங்கவில்லை. அரசர் அமைச்சரைப் பார்த்து, "அமைச்சரே, இந்தப் பெண்கள் ஒரு நிலத்தை முகத்துக்காகும், வாய்க்காகும், பிள்ளைக்காகும் என்று கூறிக் கொண்டு போகிருர்களே, இவர்கள் கூறியதன் பொருள் என்ன ?" என்று கேட்டார்.

அமைச்சர் அரசரைப் பார்த்து, "அரசே, முகத்துக்கு ஆகும் என்று கூறினளே ஒருத்தி, அதன் பொருள் என்னவென்ருல், முகத்தில் பூசும் மஞ்சள் பயிரிடுவதற்குத் தகுதியான நிலம் என்பதாகும். மற்ருெருத்தி வாய்க்கு ஆகும் என்ருளே, அதன் பொருள் வெற்றிலைக் கொடி பயிரிடுவதற்குத் தகுதியான நிலம் என்பதாகும். இன்னெருத்தி பிள்ளைக்கு ஆகும் என்ருளே, அதன் பொருள் தென்னம் பிள்ளை வைத்து வளர்ப்பதற்கு ஏற்ற நிலம் என்பதாகும்" என்று கூறினுர்.

இந்த விளக்கத்தைக் கேட்ட அரசர் பெரும் வியப்பு அடைந்தார்; தம் அமைச்சர் கூறியது சரிதானு என்று தெரிந்து கொள்ள விரும்பினுர்; தமக்கு முன்னுல் சென்று கொண்டிருந்த பெண்களை நிறுத்தி, அவர்கள் கூறியதற்கு விளக்கம் கூறுமாறு கேட்டார். அவர்கள், அமைச்சர் சொன்னதைப் போலவே கூறினர். அரசர் தம் அமைச்சரின் கூர்மையான அறிவைப் புகழ்ந்து பாராட்டினுர்.

## II

கிருஷ்ண தேவராயர், மற்றொரு முறை மாறு வேடத்தில் தம் நாட்டைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தார். நல்ல வெய்யிலில் சுற்றி வந்த தால் அவருக்குச் சற்றுக் களைப்பாயிருந்தது. ஒரு சிற்றூரின் குளக்கரை அருகில் வந்ததும் அங்குச் சிறிது நேரம் களைப்பாற விரும்பினர்.

அந்தக் குளம் மிகப் பெரியதாகவும் நீர் நிரம்பி யும் இருந்தது. அதன் ஒரு கரையில் பெரிய ஆல மரம் ஒன்று தழைத்திருந்தது. அதன் கிளைகள் நான்கு புறமும் பரவி விழுதுகள் விட்டு அடர்ந்து, ஒரு மன்னன் தன் நால்வகைப் படைகளுடன் தங்கு வதற்கேற்றவாறு நிழல் கொடுத்துக் கொண்டிருந் தது. அக் கொடிய வெய்யிலிலும் அக்குளக்கரை யில் ஆலமரத்தின் அடியில் குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்தது.

வெய்யிலில் சுற்றிவந்த கிருஷ்ண தேவராயர் அந்த ஆலமரத்தின் அடியில் தம் குதிரையை ஒரு புற மாகக் கட்டிவிட்டு, அமர்ந்தார். அவ்வமயம், அவ்வூர்ப் பெண்கள் சிலர் தண்ணீர் எடுத்துச் செல் வதற்காக அக்குளத்திற்கு வந்தனர். தங்கள் குடங் களில் நீரை நிரப்பிக் கொண்டு திரும்பிச் செல்கை யில், ஆலமரத்தை ஏறிட்டு நோக்கிய ஒருத்தி, “காலும் கழியும் ஒன்றடி” என்று கூறினள். அதைக் கேட்ட மற்றொருத்தி, அண்ணாந்து பார்த்து, “இறகும் இலையும் ஒன்றடி” என்று கூறினள். இவ்விருவர் கூறியதைக் கேட்ட இன்னொருத்தி,

"வாயும் கனியும் ஒன்றடி" என்றாள் இவ்வாறு பேசிக் கொண்டே அந்தப் பெண்கள் சென்று விட்டனர்.

மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டிருந்த இராயருக்கு இப் பெண்கள் கூறியதன் பொருள் விளங்க வில்லை. அவர் அரண்மனைக்குத் திரும்பிய பின் தம் அவையிலுள்ள அறிஞர்களிடம் அந்தப் பெண்கள் கூறியவற்றை எடுத்துச் சொல்லி, "அவற்றின் உட்பொருள் என்ன?" என்று கேட்டார். அவையினர் நீண்ட நேரம் சிந்தித்துப் பார்த்தும், அவர்களுக்கு அவற்றின் உட்பொருள் விளங்க வில்லை.

ஆனால், கிருஷ்ண தேவராயரின் முதல் அமைச்சராகிய அப்பாஜி, அரசரை நோக்கி, "அந்த மூன்று பெண்களும் ஆலமரத்தைப் பார்த்து இப்படிக் கூறினரா?" என்று கேட்டார். அரசர் 'ஆம்' என்று கூறினார். உடனே அப்பாஜி, அந்தப்பெண்கள் கூறியவற்றின் உட் பொருளை விளக்கத் தொடங்கினார்.

அரசே, அந்த ஆலமரத்தில் ஒரு கிளி பறந்து வந்து உட்கார்ந்தது. அதனை அந்த மூன்று பெண்களும் பார்த்தார்கள்; உடனே அதற்கு உவமை கூறத் தொடங்கி விட்டார்கள். 'காலுங்கழியும் ஒன்றடி' என்று ஒருத்தி கூறியது, கிளியின் காலும் மரத்தின் கிளையும் ஒன்று போல் இருக்கின்றன என்று பொருள்படுகிறது. "இறகும் இலையும் ஒன்றடி" என்று மற்றொருத்தி கூறியது கிளியின் இறகும், ஆலமரத்தின் இலையும் ஒன்றுபோல் இருக்கின்றன என்று பொருள் படு

கிறது. “ வாயுங் கனியும் ஒன்றடி ” என்று இன்னொருத்தி கூறியது கிளியின் அலகும் ஆலமரத்துக் கனியும் ஒன்றுபோல் இருக்கின்றன என்று பொருள்படுகிறது. எனவே, அப்பெண்கள் கிளியையும் ஆலமரத்தையும் இணைத்துத்தான் இவ்வாறு குறிப்பாகப் பேசியிருக்கின்றார்கள் என்று கூறினர்.

தம் முதல் அமைச்சர் கூறிய விளக்கம் பொருத்தமாக இருந்தாலும், அது சரிதானு என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்று கிருஷ்ணதேவராயர் கருதினர். எனவே, தம்முடன் அப்பாஜியை அழைத்துக் கொண்டு, அந்தச் சிற்றூருக்குச் சென்று அந்த ஆலமரத்தின் அடியில் அமர்ந்தார். இருவரும் சிறிது நேரம் உரையாடிக் கொண்டிருந்தனர். அவ்வமயம் வழக்கம் போல் நீர் எடுக்க அப்பெண்கள் குளத்திற்கு வந்தனர். அப்பெண்களை அடையாளம் கண்டு கொண்ட அரசர், அவர்களை அழைத்து, அவர்கள் கூறியவற்றிற்கு விளக்கம் கேட்டார். அப்பெண்கள், ஆல மரத்தில் வந்து நின்ற கிளியைப் பார்த்துத் தாங்கள் அவ்வாறு கூறியதாகச் சொன்னர்கள்.

அரசர், தம் முதல் அமைச்சரின் அறிவுக் கூர்மையின் திறத்தைப் பெரிதும் மெச்சி, அவருக்குப் பரிசுகள் அளித்துப் பெருமைப் படுத்தினர்.

## III

கிருஷ்ண தேவராயர் ஒருநாள் கொலு மண்டபத்தில் அமர்ந்து, ஆட்சி நடத்திக் கொண்டிருக்

கையில், தமிழ் நாட்டிலிருந்து நடன மகளிர் மூவர், அவர் கொலுமண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் மூவரும் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள்; நடனக்கலையில் பெரும் புலமை பெற்றவர்கள்; கல்வியறிவிலும் சிறந்தவர்கள். அப்பெண்கள் தங்கள் திறமையை அரசர் முன் விளக்கிப் பெருமை பெறவேண்டும் என எண்ணி விசய நகரம் வந்தனர்.

கொலுமண்டபம் வந்து அரசரைக்கண்ட அப்பெண்கள் அரசரை வணங்கினர். பிறகு,

" மன்னர் மன்னரே, நாங்கள் மூவரும் தமிழகப் பெண்கள். இசை பிசகாது பாடவும், விதி பிறழாது நடனம் ஆடவும், குழல் ஊதவும், யாழ் இசைக்கவும் எங்களுக்குத் தெரியும். தங்கள் முன்னிலையில் எங்கள் கலைத்திறனைக் காட்டித் தங்கள் அன்பான ஆதரவைப் பெறவே வந்துள்ளோம் " என்று அந்தப் பெண்கள் மூவரும் கூறினர்கள்.

பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராக விளங்கும் ஆண்டாளின் திருப்பாசுரங்களில் மனத்தைப் பறிகொடுத்து, அப்பாசுரங்களை 'ஆமுக்த மால்யதா' என்னும் பெயருடன் தெலுங்கில் எழுதியவரான கிருஷ்ண தேவராயர், அத்தமிழ்ப் பெண்களின் கலைத்திறனைக் காண விரும்பி, "நாளை நம் அவையில் உங்கள் நடனக் கலையை நாம் காணுவோம் " என்று கூறினர்.

மறுநாள் தமிழகப் பெண்களின் ஆடலைக் காணச் சபை கூடியது. நடனக் கலையில் தேர்ச்சி

உடையவர்கள் பலர் தமிழ்ப் பெண்களின் கலைத்திற னைக் காண வந்திருந்தனர். மன்னர் தம் தேவியா ருடன் வந்தமர்ந்தார்.

நடன மகளிர், முதலில் மன்னருக்கும் அவையி னருக்கும் வணக்கம் செலுத்தியபின், நடனம் ஆடத் தொடங்கினர். ஆடலுக்கேற்ற இசையும் இசைக் கேற்ற ஆடலும் அவையினர் மனத்தைக் கவர்ந்தன. அப்பெண்களின் ஆடல், நடன இலக்கணத்தினின் றும் இம்மியும் பிசகாமல் சிறப்புற்றிருந்தது. மன் னரும் அவையினரும் இந்நடனத்தைப் பெரிதும் சுவைத்தனர். மன்னர் அவர்களைப் பாராட்டிப் பெருமைப்படுத்தி விருதுகள் அளித்து, அவர்கள் மனம் மகிழுமாறு பரிசுகள் அளித்தார்.

நடனப் பெண்கள் மூவரும் மன்னர் மன்னரை வணங்கித் தங்கள் நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்து அப்பரிசுகளை ஏற்றுக் கொண்டனர். பிறகு, அவர்களுள் ஒருத்தி, " நம் மன்னர் முள்ளும் முரடுமடி " என்றாள். மற்றொருத்தி, " நம் மன்னர் கல்லும் கரடும் அடி " என்றாள். இன்னொருத்தி " நம் மன்னர் வேரும் விறகும் அடி " என்றாள்.

அவர்கள் ஏன் இவ்வாறு கூறினார்கள்? அவர் கள் கூறியவற்றின் பொருள் என்ன? என்பவற்றை அறிய மன்னர் விரும்பினார்; உடனே தம் முதலமைச் சராகிய அப்பாஜியை நோக்கினார்.

மன்னரின் கருத்தறிந்த அமைச்சர் அப்பாஜி, எழுந்து மன்னரை வணங்கிவிட்டுப் பின்வருமாறு அப்பெண்கள் கூறியவற்றை விளக்கினார்.

" மன்னர் மன்னு ! உங்களை முள்ளும் முரடும் என்ருள் இப்பெண். பலாப்பழம் முள்ளையும் முரட்டுத் தோலையும் மேற்புறத்தில் பெற்றிருக்கிறது. அதைப் போல், நீங்கள் குற்றம் செய்பவர்களுக்கும் பகை வர்க்கும் முள்போன்றவராயும் முரட்டுத்தனம் உடையவராயும் விளங்குகின்றீர்கள். அதாவது கடுமையானவராகவும் வன்மை உடையவராகவும் காணப்படுகின்றீர்கள். பலாப்பழத்தின் தோலை உரித்து விட்டால், உள்ளே பொன்போன்று விளங்கித் தேன்போல் இனிக்கும் சுளைகள் காணப் படுகின்றன. அதுபோல் நீங்களும் அகத்தில் அன்பும் இன் சொல்லும் நிறைந்து விளங்கு கின்றீர்கள். எனவே தீயவர்களுக்குக் கடுமையான வராகவும், நல்லவர்களுக்கு அன்புடையவராகவும் நீங்கள் விளங்குவதால் அப்பெண் உங்களைப் பலாப் பழத்திற்கு ஒப்பிட்டாள்.

" மற்றெருத்தி உங்களைக் கல்லும் கரடும் என்ருள். கல் என்பது மலையைக் குறிக்கும். மலை நெடுந் தொலைவிலிருந்து பார்த்தாலும் நன்கு தெரி யும். அதனுடன் பல்வேறு அரிய பொருள்களை மலை தருகிறது; அளக்கவோ அசைக்கவோ முடியாதது. அதுபோல, நீங்களும் பேராற்றல் படைத்த பகை வராலும் அசைக்க முடியாதவர். வேண்டுவோர் வேண்டியவற்றையெல்லாம் கொடுத்து ஆதரிக்கும் வள்ளல். உங்கள் புகழ் நெடுந்தொலை பரவியிருப் பதால் எங்கிருப்பவர்களும் உங்களை அறிந்து கொள்ள முடிகிறது. எனவே, மலை என்று அவள் உங்களைக் கூறியது முற்றிலும் பொருந்தும். கரடு என்பது காலடி எனப் பொருள்படும். கால் உடலைத்

தாங்குவதுடன் நம்மை நடமாட வைக்கிறது. அதுபோல நீங்கள் உங்கள் நாட்டைத் தாங்கி நாட்டு மக்களை மகிழ்ச்சிப் பெருக்குடன் நடமாட வைக்கின்றீர்கள். அதனால் அவள் உங்களைக் 'கால்' என்னும் பொருளில் கரடு எனக் கூறியது மிகவும் பொருத்தமே யாகும்.

" இன்னொருத்தி உங்களை வேரும் விறகும் என்றாள். வேர் நிறைந்து விறகுபோல் இருப்பது அடிக்கரும்பு ஆகும். அதைப்போல் புறத்தோற்றத் தில் நீங்கள் கடினமாய் இருந்தாலும் அடிக்கரும்பு மிகுந்த இனிப்புடையதாயிருப்பது போல, நீங்கள் அகத்தில் கருணையும், இன்சொல்லும், நிறைந்த வராய்க் காணப்படுவதால், வேரும் விறகும் என்று அவள் கூறியதும் பொருத்தமாகவே இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர், அந்தப் பெண்கள் மூவரும் கூறியவற்றை விளக்கியதைக் கேட்ட மன்னரும் அவையினரும் பெருமகிழ்ச்சியடைந் தனர்; அமைச்சரின் அறிவுத் திறமையையும் பாராட் டினர். அரசர் அப்பெண்களுக்கு மேலும் சில பரிசளித்துப் பாராட்டி உபசரித்து அனுப்பி வைத்தார்.

### பயிற்சி

1. பம்பை ஆற்றங்கரை நிகழ்ச்சி
2. சிற்றூர் குளக்கரை நிகழ்ச்சி
3. நடனமாதர் மன்னரைப் போற்றிய முறை
4. கிருஷ்ணதேவராயரும், அப்பாஜியும்

(இவை ஒவ்வொன்றைப் பற்றியும் ஒன்றரைப் பக்கங் களுக்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை எழுதுக.)

# 4. ஆறடிக்கு மேல் நிலமேன்?



உலகில் துன்பம் இல்லாமல் வாழவேண்டு மானுல் ஆசைகளை ஒழிக்க வேண்டும். ஆசை குறையக் குறையத் துன்பம் குறையும் என்பது அறிஞர்கள் கருத்து. ஆனுல் உலகில் மக்களுட் பெரும்பாலோர் ஆசைக்கு அடிமையாவதால், தந்நலக்காரர்களாகவும், பல பாதகச் செயல்களுக் குரியவர்களாகவும் மாறி உலக வாழ்க்கையைக் கெடுப்பதுடன், தாங்களும் கெட்டு ஒழிகின்ருர்கள். ஆசையினுல் ஏற்படும் அழிவை விளக்கவே உருசிய மூதறிஞர் தால்ஸ்தாய் பின்வரும் சிறு கதையைத் தீட்டியுள்ளார்.

பாலூர் என்பது தஞ்சை மாவட்டத்தில் உள்ள வளம் நிறைந்த ஒரு சிற்றூர். அதில் பல குடும்பத்தினர் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வந்தனர். அக்குடும்பங்களுள் ஒன்று பொன்னப்பன் குடும்பம். பொன்னப்பன் குடும்பத்தினர் பல தலைமுறைகளாக வேளாண்மை செய்து வருபவர்கள். பொன்னப்பன் தன் மூதாதையரைப் போன்று தானும் உழவுத் தொழிலையே செய்துவந்தான். அத்தொழில் செய்வதில் அவனுக்கு மிகுந்த பெருமை. “ உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர் ” என்பதை அவன் அடிக்கடி எடுத்துக் கூறுவான். அவ்வேளாண்மைத் தொழிலிலும் ‘போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து’ என்னும் மூதுரையை மனத்திற்கொண்டு தனக்குக் கிடைக்கும் வருவாயில் மன நிறைவு கொண்டவனாய், எக்கவலையும் இல்லாமல் பொன்னப்பன் இன்பமாய் வாழ்ந்து வந்தான்.

பொன்னப்பனுக்குச் சிறிதளவு நிலமே இருந்தது. அதில் நன்கு பாடுபட்டு உழைத்தான் பொன்னப்பன். அதில் விளைந்ததைக் கொண்டு, அவனும், அவன் மனைவி மாணிக்கவல்லியும் மக்கள் நால்வரும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். அக்குடும்பம் கவலையற்று, என்றைக்கும் இன்பம் நிறைந்து விளங்கியது.

மாணிக்கவல்லிக்கு ஒரு தமக்கை இருந்தாள். அவள் பெயர் மரகதவல்லி. அவள் வணிகர் ஒருவரை மணந்து நகரத்தில் வாழ்ந்து கொண்டிருந்

தாள். மரகதவல்லியின் கணவர் வாணிகத்தைச் சிறப்பாக நடத்தியபடியால் பெருஞ்செல்வம் திரட்டி இருந்தார்; அழகிய மாளிகை ஒன்று கட்டிக் கொண்டு வாழ்ந்தார். அதனுல், மரகதவல்லியின் வாழ்க்கை ஆடம்பரம் நிறைந்ததாக இருந்தது.

மரகதவல்லி, சிற்றூரில் வாழும் தன் தங்கையைக் காண விரும்பி ஒரு நாள் பாலூருக்கு வந்தாள். தன்னைக் காண வந்த தமக்கையை மாணிக்கவல்லி அன்போடு வரவேற்றுச் சிறப்புடன் உபசரித்தாள்; சிறந்த முறையில் அவளுக்கு விருந்து வைத்தாள். தங்கையின் மகிழ்ச்சி நிறைந்த உள்ளத்தைக் கண்ட மரகதவல்லி வியப்படைந்தாள். ஏனெனில் அந்தச் சிற்றூர் வாழ்க்கையும் சூழ்நிலையும் மரகதவல்லிக்குப் பிடிக்கவில்லை. அவ்வாழ்க்கை மிக எளிய, துன்பம் நிறைந்த வாழ்க்கையாக அவள் மனதிற்குப் பட்டது.

விருந்துண்டபின், ஓய்வாக அமர்ந்து தங்கையும் தமக்கையுமாகப் பேசத் தொடங்கினுர்கள். மரகதவல்லி தன் தங்கையைப் பார்த்து,

“ மாணிக்கம், நானும் என் கணவரும் குழந்தைகளும் நகரத்தில் இன்பமாக வாழ்கிறோம்; நல்ல சுவை மிக்க உணவுகளை உண்கிறோம். வகை வகையான உடுப்புக்களை உடுத்துகிறோம். திரைப்படக் காட்சிகள், நாடகங்கள், இசையரங்குகள், நடனங்கள் முதலியன நகரத்தில் அன்றுடம் நடைபெறுகின்றன. நாங்கள் அடிக்கடி சென்று அவற்றைக் கண்டு மகிழ்கிறோம்; அவற்றிற்குப் போகாத நாட்களில் பூங்காக்கள், கடற்கரை போன்ற

இடங்களுக்குச் சென்று நல்ல காற்றைப் பெற்று மெல்ல உலாவி மகிழ்கிறோம். பொதுவாக எங்கள் வாழ்வு இன்பம் நிறைந்ததாக இருக்கிறது" என்று கூறினாள்.

"அக்கா, இந்தச் சிற்றூரில், இந்தச் சிறிய குடிசை வீட்டில் நானும் என் கணவரும் குழந்தைகளும் மனநிறைவுடன் மகிழ்ச்சியாகவே வாழ்கின்றோம். எங்கள் தோட்டத்தில் விளையும் காய்கறிகளையும் கீரைவகைகளையும் அன்றாடம் புதிது புதிதாக பறித்துச் சுவையாகச் சமைத்து வயிறார உண்டு மகிழ்கிறோம். இந்தச் சிற்றூருக்கு ஏற்ற வகையில் உடுத்துகிறோம். எங்கள் வாழ்வு பார்வைக்கு எடுப்பாகத் தோன்றாது. எனினும் நாங்கள் சிறிதும் கவலையில்லாமல் இன்பமாகவே வாழ்கின்றோம். எங்களுக்கு எதிலும் மனக்குறையோ கவலையோ இல்லை அக்கா" என்று மாணிக்கவல்லி கூறினாள்.

"மாணிக்கம், இந்தச் சிற்றூரில் இந்தக் குடிசை வாழ்வையா இன்ப வாழ்வென்கிறாய்? இதனையா பெருமைப் படுத்திக் கொள்கிறாய்?" என்றாள் மரகதம்.

"ஆம் அக்கா, எங்களைவிட நீ சற்று எடுப்பாக வாழலாம். நாகரிகமாக உண்டு உடுத்தலாம். தேவைக்கு மேல் உங்களுக்கு வரவு வந்தாலும் எல்லாவற்றையும் செலவு செய்துவிட வேண்டிய நிலையை நகர வாழ்க்கை உண்டாக்கிவிடுகிறது. இன்றைக்குச் செல்வத்தில் புரள்பவர் நாளையே தங்கள் உணவுக்கு இரக்கும் நிலையுடைய வறியவர்

கள் ஆகிவிடலாம். ‘ ஆறு இடும் மடுவும் மேடும் போலாகும் செல்வம், ’ என்பது உனக்குத் தெரி யாதா ? எங்கள் நிலை அப்படிப்பட்டதன்று. என்றும் ஒரே நிலை. பயிர்த்தொழில் பெருவருவாய் தரக்கூடிய தாயில்லை. என்ருலும், என்றும் நிலைத்து நிற்கக் கூடிய சிறிய வருவாயையாவது தவருமல் அளித்துக் கொண்டிருக்கிறது. நாங்கள் என்றைக்கும் செல்வந்தராக முடியாது. ஆனுல் உண்ணவும் உடுக்கவும் எங்களுக்குப் பஞ்சமில்லை. அந்த வகை யில் எங்களுக்குத் தேவையானவற்றை நாங்கள் பெறமுடிகிறது. எங்கள் தேவையும் குறைவு; பெருவருவாயும் எங்களுக்கு தேவைப்படுவதில்லை. நாங்கள் எக்கவலையுமில்லாமல் இன்பமாக வாழ் கின்ருேம். அதனுல் பிணிகளும் எங்களை நெருங்கு வதில்லை. பிணியற்ற கவலையற்ற அமைதியான வாழ்வுதானே இன்பவாழ்வு ?” என்ருள் மாணிக்கம்.

மரகதம் தன் தங்கை கூறியதைக் கேட்டு உரக்கச் சிரித்து விட்டு அவளைப் பார்த்து, “அப்படியா ? மாணிக்கம் ! கன்றுகளுடன், பன்றி களுடன், ஆடுகளுடன், மாடுகளுடன், உங்கள் வாழ்வு நடைபெறுகிறது. நாகரிகம் பண்பாடு என் பவற்றைப்பற்றி நீங்கள் கவலைப் படுவதில்லை. உன் கணவர் எவ்வளவுதான் பொருளீட்டினுலும், இந்தச் சிற்றூரில் வாழ்க்கை நடத்தும் வரையில், நீயும் உன் மக்களும் இங்குள்ள குப்பை கூளங்களிலும், மணற்குவியலிலும் எருக்குழியிலுந்தான் படுத்துப் புரண்டு முடிவில் சாகவேண்டும். இதனையா இன்ப வாழ்வு என்கிருய் ?” என்று கேட்டாள்.

" நீ கூறுவது போலத்தானிருக்கட்டும்! அதி லென்ன தவறு? எங்கள் வேலே கடினமானதாயிருக்க லாம்; வாழ்வு மேன்மையற்றிருக்கலாம். நாங்கள் நாள் முழுவதும் சேற்றிலும் சகதியிலும் குப்பையிலும் கூளத்திலும் பாடுபடுகின்ருேம். ஆனால் எவருக்கும் தலே வணங்குவதில்லே. எங்களுக்குத் தேவைகள் மிகக் குறைவு. நகரில் வாழ்பவர்களுக்குத் தேவைகள் மிகப்பலவாம். எனவே, எங்கள் வாழ்வு ஆடம்பர மற்று படாடோபமில்லாமல் இருக்கிறது. பிறருக்குப் பணியவோ, உணர்ச்சி வசப்படவோ நேரிடாமல், அமைதியாக எங்கள் வாழ்வு நடை பெற்றுக் கொண் டிருக்கிறது. இதில் நான் முழு மனநிறைவு பெற்றிருக் கிறேன். இந்தச் சிற்றூர் வாழ்வை நான் மனமாரப் பெரிதும் விரும்புகிறேன். நகரவாழ்வு எனக்குப் பிடிக்கவில்லே. அது பயங்கர வாழ்வாக என் மனத்திற்குப் படுகிறது " என்ருள் மாணிக்கம்.

அடுத்த அறையிலிருந்த பொன்னப்பன் இவ்விருவரும் பேசிக் கொண்டதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். மரகதவல்லி கூறி யவை அவன் சிந்தனேயைத் தூண்டிவிட்டன. அவன் எண்ணம் எல்லாம் எங்கெங்கோ சென்றது.

" ஆம்; என் மனேவியின் தமக்கை கூறியவை யாவும் உண்மையே. நாங்கள் கடின உழைப்பாளி கள். சிறுவயதிலிருந்தே விழித்தது முதல் உறங்கும் வரையில் உழைத்து எங்கள் கைகளும் உடலும் கரடு முரடாகிவிட்டன. பகட்டாக உடுத்தவோ, பல்சுவையுண்டிகள் உண்ணவோ, கேளிக்கை களில் ஈடுபடவோ வேடிக்கையாகப் பொழுதைக்

கழிக்கவோ, எங்களால் முடியவில்லை. அதைப்பற்றி நினைக்கவும் எங்களுக்கு நேரமில்லை. நாங்கள் இளமையிலிருந்தே உழைப்பு ஒன்றையே கருத்திற் கொண்டு விழித்தது முதல் இரவு வரை உழைப்பதால், தீய எண்ணங்கள் எங்கள் மூளையில் எழ இடமில்லை. எங்களுக்கிருக்கும் ஒரே கவலை, இன்னும் முயன்று உழைக்க நிலமில்லையே என்பது தான். நன்ருக உழைப்பதற்குப் போதுமான நிலம் மட்டும் எங்களுக்கிருந்தால், எங்கள் வாழ்வில் துன்பமோ, கவலையோ எட்டிப்பார்க்கவும் இடந்தர மாட்டேன். என்ன செய்வது! நான் விரும்பும் அளவு எனக்கு நிலமில்லையே" என்று பொன் னப்பன் மெல்லக்கூறிக் கொண்டான்.

பொன்னப்பன் கூறியவை பிறருக்குக் கேட்க வில்லையே ஒழியத் துன்பத்தேவன் அவன் கூறியவற் றையும், அவன் மனைவி மாணிக்கம் அவள் தமக்கை மரகதவல்லியுடன் பேசிக் கொண்டிருந்தவை களையும் கேட்டுக் கொண்டிருந்தான்.

"மாணிக்கவல்லி தன் சிற்றூர் வாழ்வைப்பற்றிப் பெருமை பேசுகிருள். அவள் கணவன் பொன்னப் பனே தனக்கு மிகுதியாக நிலமிருந்தால் என்னையே தன் வீட்டில் காலடி வைக்க விடமாட்டேன் என் கிருன். என்ன இறுமாப்பு; நல்லது நான் ஒருகை பார்த்து விடுகிறேன்! இவனுக்கு வேண்டிய நிலம் நிறைய இருக்குமாறு செய்கிறேன். அதன் மூலம் இவனை என் அடிமையாக்கி வீழ்த்துகிறேன்!" என்று அந்தத் துன்பத் தேவன் தனக்குள் கூறிக் கொண்டு அவ்விடத்தை விட்டுச் சென்ருன். பாலூ

ருக்குச் சற்றுத் தொலைவில் ஒரு பெரியவர் சிறிய தொரு மாளிகையில் வாழ்ந்து வந்தார். அவருக்கு ஒரு பண்ணை இருந்தது. அவருக்கு மனைவி இல்லை. ஒரே மகன் நகரத்தில் மருத்துவக் கல்வி பயின்று கொண்டிருந்தான். அவன் விடுதி ஒன்றில் தங்கிப் படித்துக் கொண்டிருந்ததால் செலவு மிகுதியா யிருந்தது. எனவே பெரியவர் தம் சிற்றூர் பண்ணையை விற்றுவிட்டு நகரத்திற்குச் சென்று, மகனைத் தம் மேற்பார்வையில் வைத்திருக்க வேண்டு மென்று எண்ணினார்.

எனவே அப்பண்ணையார் தம் நிலபுலன்களை விற்க முயன்றார். அடுத்த ஊரார் அதை வாங்க ஏற் பாடு செய்து கொண்டிருப்பதாகவும் பாலூராருக்குச் செய்தி எட்டியது. அடுத்த ஊரார் அப்பண்ணையை வாங்கிவிட்டால், தங்களுக்குப் பெருந்தொல்லையாக இருக்குமென்று அவ்வூரார் எண்ணினர்.

அவர்கள் ஓர் ஆலமரத்தினடியில் ஒன்று கூடிப் பேசினர். அடுத்த ஊரார் கொடுப்பதைவிடச் சிறிது மிகுதியான தொகையைக் கொடுத்து, அந்தப் பண்ணையைத் தாங்களே வாங்கிவிடுவதென்றும், அதற்குத் தரவேண்டிய தொகையைத் தாங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கொடுப்பதென்றும் முடிவு செய்தனர். இந்த ஊரார் செய்த முடிவை அந்தப் பண்ணையாரிடம் கூறிய போது அவர் அதற்கு இணங்கினார்.

பாலூரார் தனித்தனியே அந்தப் பண்ணையின் நிலங்களைப் பிரித்து அவரவர்கள் பண நிலைக்கேற்ற

வாறு வாங்கிக் கொள்ளலாம் என்று பாலூரார் முடிவுசெய்தனர். இந்த ஏற்பாட்டை அந்தப் பண்ணையாரும் ஏற்றுக் கொண்டார். மேலும் ஊராருட் சிலர் ஐம்பது காணி, அறுபது காணி என்று நிலத்தைப் பிரித்து விலைபேசி வாங்கி ஒரு பாதிக் கட்டணத்தை அப்பொழுதே செலுத்தி விட்டு, மறுபாதியைச் செலுத்த ஓராண்டுக் காலத் தவணை பெற்றுக் கொண்டனர்.

பொன்னப்பன், தம் மனைவியுடன் இதுபற்றிக் கலந்தாலோசித்தான். இருபது காணி நிலமாவது தாங்கள் வாங்கியேயாக வேண்டும் என்றும், இல்லையென்றால் பிழைப்புக்கே பஞ்சம் வந்து விடும் என்றும் அவன் தன் மனைவிக்கு எடுத்துரைத்தான். அவள் அதற்கிணங்கினாள். பொன்னப்பன் தன் மைத்துனனிடம் சிறிது தொகை கடன் வாங்கியும் தம்மகனை ஓரிடத்தில் வேலைக்கு அமர்த்தி அம் முதலாளியிடம் பையனுக்குரிய ஓராண்டுச் சம்பளத் தொகையை அச்சாரமாகப் பெற்றும், வேறு சில வகைகளில் முயன்றும் முழுத் தொகையைத் திரட்டிவிட்டான். பிறகு பண்ணையாரிடம் இருபது காணி வாங்கலாம் எனத் தான் எண்ணியதை இரட்டிப்பாக்கி நாற்பது காணி நிலத்தை விலை பேசிப் பாதித் தொகையை செலுத்திவிட்டான். மறு பாதியை இரண்டாண்டுகளில் தீர்த்துவிடுவதாக ஒப்பந்தம் செய்து கொண்டான்.

பொன்னப்பன் இப்போது நாற்பது காணி நிலத்துக்கு உரியவனாகி விட்டான். நல்ல விதைகளைப் பெற்று வந்து தான் வாங்கிய நிலங்களில் விதைத்

தான்; நல்ல விளைச்சலை அடைந்தான். ஒரே ஆண்டில் பண்ணையாருக்குத் தரவேண்டிய கடனையும், மைத்துனனிடமும் மற்றோரிடமும் வாங்கிய கடனையும் தீர்த்து விட்டான்; இப்போது மகிழ்ச்சி நிறைந்த மனத்துடன் சிறிய பண்ணையார் போல இன்பமாக வாழ்க்கை நடத்தி வந்தான்.

பொன்னப்பன் பண்ணையில் நெல் விளைந்தது; கரும்பு விளைந்தது; காய்கறிகள் விளைந்தன; மலர்கள் மலர்ந்தன. மாடுகளின் தீவனத்துக்கெனப் புல் வெளிகள் இருந்தன. எங்கும் பச்சைப்பசேலென வளம் பெற்று விளங்கிய பொன்னப்பனது பண்ணையில் மற்ற உழவர்களின் கால் நடைகள் வந்து மேயத் தொடங்கின. இதனையறிந்த பொன்னப்பன் முதலில் அவற்றை விரட்டி விடுவதுடன் நின்றான். அவற்றுக் குரியவர்களிடம் சென்று அன்பு காட்டி இனிய முறையில் பேசித் தன் பண்ணையில் மாடுகளை மேயவிடாமல் தடுக்குமாறு வேண்டிக் கொண்டான். ஆனால் அது நிற்கவில்லை. முன்னைவிட மிகுதியான அளவில் மாடுகள் வந்து மேயத் தொடங்கின. இவ்வாறு பல நாட்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இவ்வாறு தொடர்ந்து நடந்தபடியால் முதலில் அமைதியாயிருந்த பொன்னப்பன் இறுதியில் பெருங்கோப மடைந்தான். அக்கம் பக்கத்தில் வாழ்ந்த உழவர்கள் வேண்டுமென்றே கால் நடைகளைத் தன் பண்ணையில் மேயவிடவில்லை என்பதையும், வறுமையே இதற்குக் காரணமென்பதையும், வேறு தீய நோக்கம் ஏதும் இல்லை என்பதையும்

பொன்னப்பன் நன்கறிந்திருந்தான். எனினும், அவன் தன் வயல்களின் வளத்தைக் காத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அதனல் நீதிமன்றத் தில் முறையிட்டுச் சிலருக்குத் தண்டம் விதிக்குமாறு செய்தான். இதனல் ஊருட் சிலர் பொன்னப்பன் மீது வெறுப்புக்கொண்டனர். வேண்டுமென்றே தங்கள் கால் நடைகளை அடிக்கடி அவன் பண்ணை யில் மேயவிட்டனர். எவனே ஓர் உழவன் இரவில் பொன்னப்பன் பண்ணையில் புகுந்து அங்கிருந்த ஐந்து எலுமிச்சை மரங்களை வெட்டித் துண்டு துண் டாக ஆக்கிவிட்டான். மறுநாட் காலையில் இதனைக் கண்ட பொன்னப்பன் பெருஞ்சினங் கொண்டான். இத்தகைய அடாத செயல் செய்தவன் கருப்பண்ண ணுகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினன். கருப்பண்ணன் எதற்கும் துணிந்த முரடனுதலால் அவனைத் தவிர்த்து எவரும் இதனைச் செய்திருக்க முடியாது என்று எண்ணி அவன்மீது நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தான்.

நீதி மன்றத்தில் நடந்த வழக்கில் கருப் பண்ணனே குற்றவாளி என்பது தக்க சான்று களால் மெய்ப்பிக்கப் படவில்லை. ஆதலால் நீதிபதி கருப்பண்ணன் குற்றமற்றவனென்று கூறி விடுதலை செய்து விட்டார். ஆனல், பொன்னப்பனே நீதிபதி தனக்கு அநீதி செய்துவிட்டதாகக் கருதினன். நீதி மன்றத் தீர்ப்பு அநீதியானதெனக் கூறினன்; அதனல் பலருடைய வெறுப்புக்கு ஆளானன். நிலைமை இங்ஙனமாகிவிடவே பொன்னப்பனுக்கு பகைவர்கள் பெருகினர். அவ்வூராரே அவனுக்கு

எதிராக இருந்தனர் என்று கூறலாம். பொறாமையால் சிலர் பொன்னப்பனை வெறுத்துப் பேசினர். பொதுவாகப் பொன்னப்பன் அவ்வூரில் அமைதியாக வாழமுடியவில்லை.

அவ்வூரார் சிலர் வேறு ஊர்களுக்குக் குடியேறுவதாக ஒரு செய்தி பரவியது. அச்செய்தி பொன்னப்பனுக்கு மகிழ்ச்சி யூட்டுவதாக இருந்தது. அப்படிச் சிலர் ஊரைவிட்டுத் தொலைந்தால், அவர்களுடைய நிலங்களையும் வாங்கிக் கொண்டு, தன் பண்ணையை இன்னும் சிறிது பெரிதாக்கி விடலாம் என்றும், தன் பண்ணை சிறியதாயிருப்பதால் பயனில்லை என்றும் அவன் எண்ணினன்.

இந்நிலையில் பொன்னப்பன் வீட்டிற்கு நெடுந் தொலைவிலிருந்து ஒருவர் வந்தார். அவர் அவ்வூருக் குப்புதியவர். பொன்னப்பன் பண்ணைக்காரர் ஆகையால் அவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். வடக்கே ஒரு காட்டுப்பகுதியில் அங்கே வந்து குடியிருப்பவர்களுக்கு ஆளுக்கு ஐம்பது காணி நிலம் என ஒதுக்கிக் கொடுக்கப்படுகிற தென்றும், அப்பகுதியில் தம் மூரிலிருந்து பலர் குடியேறி உள்ளனர் என்றும் கூறினர். விருந்தினரை உபசரித்து விருந் திட்டபின் நிலத்தை இலவசமாகக் கொடுக்கும் காட்டுப் பகுதி இருக்கும் இடம் பற்றிய முழு விவரங் களையும் பொன்னப்பன் கேட்டுத் தெரிந்துகொண் டான்.

வந்தவர் சென்றபின் இரண்டு நாட்கழித்து அக்காட்டுப் பகுதிக்குப் பொன்னப்பன் சென்றான்; முந்நூறு கிலோ மீட்டர் தொலை பயணம் செய்தபின்

அவ்விடத்தை அடைந்தான். விருந்தினர் கூறியவை அனைத்தும் உண்மையே என உணர்ந்தான். அங்கு நிலம் வளம் மிக்கதாய் இருந்தது. முதலில் கையில் ஒருகாசுமின்றிக் குடியேற வந்த பலர் இப் போது சீரும் சிறப்புமாய் வாழ்வதாக அங்குள் ளோர் கூறியதைக் கேட்ட பொன்னப்பன் மனத்தில் பேரவா பொங்கியது.

என்னுடைய சிறிய பண்ணையில் நான் ஏன் துன்புற வேண்டும்? இங்கே பல நலன்களோடு வாழ வழி இருக்கும் போது, அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருப்பது அறிவீனம் அல்லவா? என்று எண்ணிய பொன்னப்பன் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். பண்ணையை விற்றுப் பண மாக்கினான்; கால் நடைகளை எல்லாம் விற்றான். பிறகு தன் மனைவி மக்களை அழைத்துக் கொண்டு நெடுந்தொலை பயணம் செய்து அக்காட்டுப் பகுதியை அடைந்தான். அங்கிருந்த தலைவர்கள், பொன்னப்பன் குடும்பத்திலுள்ளவர்களைக் கணக் கிட்டு, ஆளுக்கு ஐம்பது காணி நிலம்வீதம் ஒதுக்கிக் கொடுத்தனர். இது தவிர, பொது மேய்ச்சல் நிலத் தைக் கால்நடைத் தீவனத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ளும் உரிமையையும் பொன்னப்பன் பெற்றான்.

பொன்னப்பன் அங்கே தனக்கு வேண்டிய அள வில் வீடு அமைத்துக் கொண்டு வளம்மிக்க அந்த நிலங்களில் பயிரிட்டு நல்ல விளைச்சலை அடைந்து இன்பமாக வாழ்ந்து வந்தான். இதற்கு முன்னால் பொன்னப்பன் வாழ்ந்து வந்த நிலையைவிடப் பதின்

மடங்கு உயர்ந்த நிலையை இப்போது அடைந்தான். நிலமும் முன்னைவிட மூன்று மடங்கு மிகுதியான அளவில் இப்போது பொன்னப்பனிடம் இருந்தது. இவ்வளவிருந்தும் பொன்னப்பனுக்கு ஆசை குறைய வில்லை. மேலும் பணம் சேர்த்துப் பெரும் பணக் காரன் ஆகவேண்டும் என்றும், தன்னைப் பிறர் ஒரு பெரிய பண்ணைக்காரர் என்று நினைக்க வேண்டும் என்றும் எண்ணினான். ஆகவே குத்தகைக்குப் பிறர் நிலங்களைப் பெற்று விளைச்சலைப் பெருக்கித் தன் செல் வத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தான்.

இவ்வாறு சில ஆண்டுகள் வரை தன் செல்வத் தைப் பெருக்குவதில் ஊக்கஞ் செலுத்தி வந்த பொன் னப்பன், இன்னும் வடக்கே நெடுந்தொலைவில் மலை வாழ் இன மக்கள் தலைவன் ஒருவன் வளப்பம் மிக்க நிலங்களைப் பத்து ரூபாய்க் கொரு காணி யென விற்ப தாகக் கேள்விப்பட்டான். அந்த மலைவாழ் மக்கள் தலைவனுடன் நட்புக் கொண்டால், அவனுக்கு விருப்பமான பொருள்களை வாங்கி அளித்தால், இன் னும் குறைந்த விலையிலும் நிலங்களைக் கொடுப்ப தாகப் பொன்னப்பன் கேள்விப் பட்டான். பேரவா அவன் பிடரியைப் பிடித்து உந்தியது. எப்படி யாவது அந்த மலைத்தலைவனைப் போய்ப் பார்த்து விட்டு வரவேண்டு மென்று முடிவு செய்தான்.

பொன்னப்பன் தான் கேள்விப்பட்ட புதிய இடத்திற்கு முதலில் தனியே சென்று பார்த்து விட்டு வரவேண்டு மென்று, கையில் ஐயாயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு, துணைக்கு ஓர் ஆளை அழைத் துக்கொண்டு புறப்பட்டான் ; வழியில் ஓர் ஊரில்

அந்த மலைவாழ் மக்கள் தலைவனுக்கு விருப்பமான பொருள்கள் பலவற்றை வாங்கி எடுத்துக் கொண் டான்; ஏழு நாட்களாக வண்டியிலும் நடந்தும் ஐந் நூறு கிலோ மீட்டர் தொலைவுக்கு மேல் சென்று அந்த மலைவாழ்மக்கள் வாழும் இடத்தை அடைந் தான்.

அந்த மலைவாழ் மக்கள் குடிசைகளில் வாழ்ந் தார்கள். தங்களுக்கு வேண்டிய அளவு நிலத்தில் மட்டும் பயிரிட்டுக் கொண்டு மற்றவற்றைப் பயன் படுத்தாமலே விட்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் அளவில் 'போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற கொள்கை உடையவர்களாக இன் பமாய் வாழ்ந்து வந்தார்கள். பொன்னப்பன் அங்குச் சென்றவுடன், எவரோ வேற்று நாட்டவர் தம் ஊருக்கு வந்திருப்பதாக எண்ணிய அவ்வூரார், அவனைச் சூழ்ந்து கொண்டு வரவேற்று உபசரித்துத் தக்க இருக்கை அளித்து அங்கு வந்த செய்தி பற்றிக் கேட்டனர்.

பொன்னப்பன் தான் கொண்டு வந்த பரிசுப் பொருள்களை அத்தலைவனிடம் அளித்தான். அவற் றைப் பெற்றுத் தம் மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டு மகிழ்ச்சியுடன் அமர்ந்த அத்தலைவன் பொன் னப்பனைப் பார்த்து, "நெடுந்தொலை நடந்து வந்து இளைத்திருக்கிறீர்கள் எனத் தெரிகிறது. இங்கு எத்தனை நாள் வேண்டுமானாலும் தங்கி உண்டு இன்பமாகக் காலங் கழிக்கலாம். ஆனால் நீங்கள் இங்கே எதனை நாடி வந்தீர்கள் என்பதைத் தெரிவித் தால் எங்களால் இயன்றதைச் செய்கிறோம்," என்று கூறினான்.

TB 03/3/10 1165

பொன்னப்பன் அத்தலைவனை நோக்கி, "ஐயா, தங்கள் அன்புக்கும் உபசாரத்திற்கும் என் நன்றி. நான் ஐந்நூறு கிலோ மீட்டர் தொலைவிற்கு அப்பாற் பட்டதொரு காட்டிலிருந்து தங்கள் பெருமையையும் உயர் பண்பையும் தங்கள் நாட்டின் வளத்தையும் பற்றிக் கேள்வியுற்று, இங்கேயே தங்களுள் ஒருவனாக வாழலாம் என்னும் எண்ணத்தோடு வந்திருக் கிறேன். எனக்குத் தங்களுடைய இந்தப் பகுதியில் நிலம் அளித்தால் நான் என் குடும்பத்துடன் இங் கேயே குடியேறி என் வாழ் நாட்களை இங்கேயே கழித்து விடுவேன்" என்று கூறினான்.

123963

" அப்படியா ! மிகவும் மகிழ்ச்சி. எங்கள் நாட் டில் பயிரிடப்படாமல் அளவுகடந்த நிலம் இருக் கிறது. அவை மிக்க வளப்பம் பொருந்திய நிலங்க ளாகும். அதோ தெரிகிறதே! அந்த ஆறு என்றும் வற்றாது. அதன் நீரைப் பாய்ச்சி இந்த நாடெங் கும் விளையாத நிலம் என்பது ஓரங்குலமும் இல்லை. அது மட்டு மன்று. எத்தனை ஆண்டுகள் மடித்து மடித்துப் பயிரிட்டாலும் எங்கள் நாட்டு நிலம் உரம் குன்றுவதில்லை. அடிக்கடி சாரம் குன்றிப்போ வதோ, கரம்பாகி விடுவதோ, விளைச்சல் குறை வதோ எங்கள் நாட்டில் இல்லை. இந்த நாட்டில் உங்களுக்கு எவ்வளவு நிலம் வேண்டுமோ அவ் வளவையும் நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்" என்று அத்தலைவன் மகிழ்ச்சியுடன் கூறினான். "தலை வரே ! உங்கள் அன்பான சொற்களுக்கு நன்றி. நான் விரும்பும் அளவு நானே எடுத்துக் கொள்ளுவது என்பது எப்படிப் பொருத்தமாக இருக்கும் ? அதனை

எல்லை வகுத்து ஆவணக்களரியில் பதிவு செய்து கொடுக்க வேண்டுமல்லவா ? அப்படி இல்லை என்ருல் இப்பொழுது நான் விரும்பும் அளவு நிலம், அன்பு நிறைந்த உங்களால் எனக்கே தரப்பட்டாலும், நாளை ஒரு காலத்தில் உங்கள் மனம் மாறுபட்டு அந் நிலம் அனைத்தையும் என்னிடமிருந்து பறித்துக் கொள்ளலா மல்லவா ? எனவே எல்லை கட்டிப் பதிவு செய்து, ஆவணம் செய்து கொடுப்பதே சிறந்த செயலாகும். உங்களிடம் பேரளவில் நிலம் இருக்கிறது. எனக்குச் சிறிதளவு கொடுத்தால் போதும். அதனை அளந்து ஆவணம் எழுதிக் கொடுத்து விட்டால் அது போதும்," என்று பொன்னப்பன் அத் தலைவனிடம் கூறினுன்.

"நீர் கூறியது மிகவும் உண்மை. நீர் விரும்பிய படியே செய்வோம். சற்றுத்தொலைவில் உள்ள நகரத்திற்குச் சென்று ஆவணம் எழுதிப் பதிவு செய்து தருகிருேம்" என்ருன் தலைவன். "மிகவும் மகிழ்ச்சி. அப்படியாயின் தாங்கள் இதற்காக என்ன விலை கேட்கின்றீர்கள்?" என்று கேட்டான் பொன்னப்பன்.

"உங்களுக்கு இது தெரியாதா ? எங்கள் விலை எப்போதும் ஒரே விலைதான். அதாவது ஒரு நாளைக்கு ஆயிரம் ருபாய்" என்ருன் தலைவன்.

"ஐயா ஒரு நாளைக்கு ஆயிரம் ருபாய் என்ருல் அது எனக்குச் சரியாக விளங்க வில்லையே ! இது என்ன கணக்கு ? இந்தக் கணக்குப்படி எத்தனை காணி நிலம் கிடைக்கும் ?" என்று கேட்டான் பொன்னப்பன்.

எத்தனை காணி என்பதோ எப்படி நிலத்தை அளப்பதென்பதோ எங்களுக்குத் தெரியாது. நாங்கள் நாள் கணக்கில்தான் நிலங்களை விற்கிறோம். ஒரு நாளைக்கு ஓராயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும். ஒரு நாளைப் பொழுதில் நீங்கள் எவ்வளவு தொலை நடந்து போய்த் திரும்பி வருகின்றீர்களோ, அவ்வளவு தொலையுள்ள நிலம் உங்களுடையதே. அது தான் நாங்கள் கணக்கிடும் முறையாகும்'' என்றான் அந்த மலைத் தலைவன்.

“வியப்பாயிருக்கிறதே! அப்படியானால் ஒரு நாளையில் மாபெரிய அளவுள்ள நிலத்தைச் சுற்றி வந்து விடலாமே!'' என்றான் பொன்னப்பன்.

“நீங்கள் எவ்வளவு தொலை சுற்றி வந்தாலும் அவ்வளவு தொலையுள்ள நிலப் பகுதியும் உங்களுக்குத் தான். ஆனால், இதில் ஒரு நிபந்தனை உள்ளது. குறிப்பிட்ட நேரத்தில் நீங்கள் புறப்பட்டுக் குறிப்பிட்ட நேரத்திற்குள் சுற்றிக் கொண்டு புறப்பட்ட இடத்திற்குத் திரும்பி வந்துவிட வேண்டும். இது தவறினால் நிலமும் இல்லை; நீங்கள் கொடுத்த ஆயிரம் ரூபாயும் பறிமுதலாகி விடும்'' என்று மலைத் தலைவன் பெருங் குரலில் சிரித்துக் கொண்டே கூறினான்.

“நான் சுற்றி வந்த தொலை இவ்வளவுதான் என்று எப்படிக் குறிப்பிடுவது?'' என்று கேட்டான் பொன்னப்பன்.

“ நீங்கள் விரும்பும் இட மொன்றுக்கு நாம் போவோம். அங்கே நாங்கள் நின்று விடுவோம். அங்கிருந்து நீங்கள் புறப்பட்டுச் சுற்றி வரவேண்டும். நீங்கள் கையில் ஒரு மண் வெட்டி எடுத்துச் செல்லுங்கள். ஒவ்வொரு திருப்பத்திலும் நீங்கள் மண் வெட்டியால் பள்ளம் வெட்டி அடையாளம் செய்தல் வேண்டும். சூரியன் மறைவதற்குள் நீங்கள் புறப்பட்ட இடம் வந்து சேரவேண்டும். அதற்குள் நீங்கள் எங்கெங்குப் பள்ளம் தோண்டி அடையாளம் செய்திருக்கிறீர்களோ அந்த அளவு நிலம் உங்களுடையதாகும். நீங்கள் மண் வெட்டியால் அடையாளம் செய்த இடங்களைப் பிறகு நாங்கள் உழுது பள்ளமாக்கி எல்லை அமைத்து விடுவோம். உங்களால் முடிந்தவரை சூரியன் மறைவதற்குள் நீங்கள் எவ்வளவு தொலை சுற்றி வந்தாலும் அவ்வளவும் உங்களுக்கே உரியதாகும்” என்று கூறினுன் அந்த மலைத் தலைவன்.

“நல்லது உங்கள் திட்டம் எனக்குப் பெரு மகிழ்ச்சியளிக்கிறது. நாளைக் காலையில் புறப்படுவோம்” என்ருன் பொன்னப்பன்.

மறு நாள் விடியற்காலையில் சூரியன் தோன்றும் பொழுது சுற்றிவரப் புறப்படுவது என்று சொல்லப் பட்டது. அன்றிரவு பொன்னப்பனுக்குப் பெரு விருந்து நடத்தப்பட்டது. அனைவரும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருந்தார்கள். ஆட்டமும் பாட்டும், நடனமும் நாட்டியமுமாகப் பெருங் கேளிக்கையில் அன்றிரவு நெடு நேரம் கழிந்தது.

பொழுது விடிந்ததும், பொன்னப்பன் எழுந்து விரைவில் காலைக் கடன்களை முடித்துக் கொண்டான். அதற்குள் மலைத்தலைவனும் மற்ற மலை வாசிகள் சிலரும் அங்கு வந்து சேர்ந்தனர். அனைவருமாகச் சற்றுத் தொலைவிலிருந்த வயற் காட்டுக்குச் சென்றார்கள். பொன்னப்பன் தன்னுடன் வந்த ஆளை அழைத்துக் கொண்டு, மண் வெட்டி ஒன்றைத் தூக்கித் தன் தோளில் சார்த்திக் கொண்டு புறப்பட்டான்.

குன்று போன்ற ஓரிடத்தில் அனைவரும் நின்றனர். நாடோடித் தலைவன் பொன்னப்பனை அழைத்து, " இதோ பாரும் ! கண் பார்வைக் கெட்டிய தொலைவரையிலுள்ள நிலங்களனைத்தும் எங்களுக்கு உரியவையே. இதில் உங்களுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் உங்களுடையதாக்கிக் கொள்ளலாம் " என்று கூறினான்.

பொன்னப்பன் மனம் பெருமகிழ்ச்சியுற்றது. அங்கிருந்த நிலம் மிகுந்த வளம் பொருந்தியது; மேடு பள்ளமில்லாதது. பண்படுத்தினால் மற்றெங்கும் இல்லாத அளவு விளைச்சலைத் தரவல்லது என்பதை அவன் நன்குணர்ந்தான். மலைத்தலைவன் உட்கார்ந்து தன் கைப்பையை எடுத்து எதிரில் வைத்தான். மற்ற மலைவாசிகளும் பொன்னப்பனுடன் வந்த ஆளும் அவனைச் சூழ உட்கார்ந்து கொண்டார்கள். தலைவன் பொன்னப்பனை நோக்கி, " ஐயா இந்த இடந்தான் நீங்கள் புறப்பட வேண்டிய இடத்தைக் குறிக்கும் அடையாளம். நீங்கள் திரும்பி வந்து சூரியன் மறைவதற்குள் இதே

இடத்தை அடையவேண்டும். அதற்குள் நீங்கள் சுற்றிக் கொண்டு வரும் இடமனைத்தும் உங்களுக்கே தரப்படும். ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விடும்,'' என்று கூறினான்.

தலைவன் கூறியபடி பொன்னப்பன் ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விட்டான்; மண் வெட்டியைத் தோளில் சாற்றிக் கொண்டு சோற்று மூட்டையைத் தலையில் வைத்துக் கொண்டு வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான்; ஆயிரம் முழம் சென்றதும் ஒரு குழி வெட்டினான். இவ்வாறு ஆயிரம் முழத்துக்கொரு குழியாக வெட்டிக் கொண்டே ஒரே நேராகச் சென்றான்; இவ்வாறு நேராக ஏறத்தாழ ஐந்து கிலோ மீட்டர் தொலை சென்றபின் பொன்னப்பன் திரும்பிப் பார்த்தான். மலைத்தலைவன் உட்கார்ந்திருந்த குன்றும், அதன் மீதிருந்த அனைவரும் நன்றாகப் பொன்னப்பனுக்குத் தெரிந்தனர்.

எனவே, மேலும் ஒரே நேராகப் போய்க் கொண்டிருந்தான்; அதற்குள் உச்சி வேளை வந்து விட்டது. திரும்பிப் பார்த்தான். குன்றின் மீதிருந்தவர்கள் எறும்புகள் போலக் கண்ணுக்குத் தெரிந்தனர். மேலே நடக்க நடக்க நிலம் மேலும் வளப்பம் உடையதாக இருந்தபடியால், அதோடு போதும் என்று திரும்ப அவன் மனம் இடந்தரவில்லை. இவ்வாறு மேலும் சற்றுத் தொலை நேராகவே சென்று இடப்பக்கமாகத் திரும்பினான்.

பசி மிகுதியா யிருந்தபடியால் ஓரிடத்தில் உட்கார்ந்து சோற்று மூட்டையை அவிழ்த்துத் தின்று

விட்டு மீண்டும் நடந்தான். நேர்கிழக்காக எவ்வளவு தொலே வந்தானே அவ்வளவு தொலே நேர்த்தெற்காகவும் நடந்துபோனுன்.

வெயில் மிகக் கடுமையாக இருந்தது. பொன்னப்பன் உடல் வியர்த்துக் கொட்டத் தொடங்கியது. சற்று உறங்கினுல் நலமாயிருக்கும் என்று தோன்றிற்று. எனினும் உறங்கினுல் பேரளவில் நிலம் பெற முடியாமற் போய்விடுமே என்ற ஆசை காரணமாக, உறங்காமலும் உட்காராமலும் அவன் நடந்து கொண்டேயிருந்தான்; பிறகு மேற்குப் புறம் திரும்பி மிக வேகமாக நடந்து சென்றுன்; தன் நிலப்பகுதி சதுரமாக அமைய வேண்டும் என்னும் ஆசை காரணமாக விரைந்து நடந்தான்; ஆங்காங்கே மறவாமல் குழிகளே வெட்டிக் கொண்டேபோனுன்.

கடைசியாக வடக்குப்புறம் திரும்பினுன். பொன்னப்பனுல் விரைந்து நடக்க முடியவில்லே. கால்கள் தள்ளாடத் தொடங்கின. வெயிலினுல் உண்டான அசதியும் நெடுந்தொலே நிற்காமல் நடந்து வந்ததால் உண்டான களேப்பும் மிகுதியாக இருந்தன. பாதங்களோ, கற்களால் குத்தப்பட்டுப் புண்ணுகி வலிக்கத் தொடங்கின. சற்றுவது ஓய்வாக உட்காருதல் நலமெனக் கருதினுன். ஆனுல் சூரியன் மறைவதற்குள் தலேவன் இருக்குமிடம் போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்னும் ஆத்திரத்தால் விரைந்து நடந்து வந்து கொண்டிருந்தான். சூரியனே அடிவானத்தில் இறங்கிவிட்டது. தலேவன் இருக்குமிடம் இன்னும் நெடுந்

தொலைவில் இருந்தது. "ஐயோ! சூரியன் மறைவதற்குள் நான் போய்ச் சேரமாட்டேன் போலிருக்கிறதே! பேராசையினால் நெடுந்தொலைப் பகுதியை வளைக்க வேண்டி இவ்வளவு தொலை நடந்து விட்டேனே! இனி என்ன செய்வேன்!" என்று எண்ணிய வண்ணம் பொன்னப்பன் விரைந்து ஓடத் தொடங்கினான். அச்சத்தாலும் வெப்பத்தாலும் உடல் வியர்த்தது. அவன் சட்டையும் வேட்டியும் உடலோடு ஒட்டிக் கொண்டன. நா உலர்ந்து இதயம் சம்மட்டியால் அடிப்பதுபோல ஒலித்துக்கொண்டிருந்தது. மார்பு துருத்தி போன்று எழும்பியெழும்பி அடங்கிக் கொண்டிருந்தது. கால்கள் தள்ளாடித் துவண்டன. இந்தக் கடுவேலையால் உண்டான தளர்ச்சி தன்னைக் கொன்றுவிடுமோ என்று பொன்னப்பன் அஞ்சினான். ஆனால், நிற்கவில்லை.

"இப்பொழுது நின்றுவிட்டால் அவர்கள் என்னை முட்டாள் என்று எண்ணி விடுவார்கள்" என்று எண்ணியவாறு அவன் ஓடிக் கொண்டே இருந்தான். மலைவாசிகள் கைதட்டி ஆரவாரம் செய்து விரைந்து ஓடி வருமாறு கூவியழைக்கும் ஒலி பொன்னப்பன் காதில் தெளிவாகக் கேட்டது. அவர்கள் கையை வீசி அழைப்பது தெரிந்தது. இடுப்பில் கை வைத்தவாறு சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த தலைவன் உருவம் தெரிந்தது. சூரியன் இரத்தம் போன்று செந்நிறத்தோடு அடிவானத்தில் மறையத் தொடங்கியதும் தெரிந்தது.

"இன்று முழுவதும் அரும்பாடுபட்டு நடந்தது பயனில்லாமல் போய்விட்டதே!" என்று எண்

ணிய பொன்னப்பன் நிற்க முயன்றபோது, குன்றின் மேலிருந்த நாடோடிகள் விரைந்து வருமாறு கை கொட்டிக் கூவினர்கள். "ஒரு வேளை குன்றின் மேலிருப்பவர்களுக்குச் சூரியன் இன்னும் தெரிகிறது போலும்!" என்று எண்ணிய பொன்னப்பன் தன் முழுவலிமையை வரவழைத்துக் கொண்டு மூச்சுப் பிடித்து அந்தக் குன்றின் மீது ஓட்டம் ஓட்டமாக ஓடினன்; உச்சியை அடைந்ததும் சூரியன் இன்னும் சிறிது மறையாதிருப்பதைக் கண்டான். தலைவன் இடுப்பில் கை வைத்துக் கொண்டு உரத்துச் சிரிப்பதைக் கண்டான். அச்சத்தால் ஒருவித ஒலி அவன் வாயினின்று வெளிப் பட்டது. கால்கள் பின்னின. அவன் நெடு மரம் சாய்வது போலத் தலைவன் காலடியில் போய் விழுந்தான். "மிகச் சிறந்தவன்; ஆசை மிகவுடையவன்; பெரிய அளவு நிலத்தைத் தனக்குரியதாக்கிக் கொண்டான் இந்த மனிதன்," என்று தலைவன் கூறினன்.

பொன்னப்பனின் ஆள் வந்து அவனைத் தூக்கி உட்கார வைக்க முயன்றபோது, அவன் வாயினின்று இரத்தம் வடிவதையும் அவன் செத்துக் கிடப்பதையும் அறிந்தான். மலைவாசிகள் பொன்னப்பன் நிலைகண்டு இரக்கப்பட்டார்கள்.

பொன்னப்பனின் ஆள், அவன் வைத்திருந்த மண்வெட்டியை எடுத்து, அவனைப் புதைப்பதற்காக வேண்டிய ஆறடி அளவு நிலத்தில் குழி வெட்டி அதில் அவன் சவத்தைப் புதைத்து

விட்டான். "பேராசை பெருங்கேடு" என்பது இதன் மூலம் மிகத்தெளிவாக உணரக்கிடக்கிறது.

பயிற்சி

1. நகர வாழ்வு சிறந்ததா? நாட்டுப்புற வாழ்வு சிறந்ததா?

2. பொன்னப்பன் பண்ணைக்காரன்

3. காட்டுப் பகுதியில் பொன்னப்பன்

4. மலைவாழ் மக்களிடை பொன்னப்பன்

5. பேராசையால் விளைந்தகேடு

(இவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒன்றரைப் பக்கங்களுக்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை வரைக.)

# 5. இறைவனில்லா இடம் எது?



இறைவன் எல்லாம் வல்லவன், எங்கும் நிறைந்தவன், எல்லாம் அறிந்தவன் என்றே உலக அறிஞர்கள் எல்லாம் கூறுகின்றனர். அத்தகைய இறைவன், மக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் உறைகின்ருன் என்பதும், மக்கள் தொண்டு ஆற்றுவதே இறைவன் பணி ஆற்றுவதாகும் என்பதும் அனைவரும் ஒப்புக் கொள்ளக் கூடிய தொன்ருகும். இதனை விளக்க உருசியப் பேரறிஞர் தால்ஸ்தாய் கூறியுள்ள கதையொன்றினைத் தழுவிப் பின்வரும் கதை கூறப்படுகிறது:

பொன்னூரில் வாழ்ந்த சின்னப்பர் நெசவுத் தொழில் செய்து வாழ்க்கை நடத்தி வந்தார்;

"நெய்யுந் தொழிலுக்கு நிகரில்லை" என்றபடி அத்தொழிலில் ஆர்வங் கொண்டு, அன்றாடம் அவ் வேலையில் ஈடுபடுவார். சோம்பித் திரிவதோ, வீண் பேச்சுப் பேசுவதோ அவரிடம் காண முடியாதவை.

சின்னப்பர் எவரிடமும் இனிமையாகப் பேசுவார்; விளையாட்டுக்குக் கூடப் பொய்பேச மாட்டார்; ஒழுக்கக் கேடான செயல்களைச் செய்யமாட்டார்; நேர்மையும் கண்டிப்பும் உள்ளவர்; எல்லாரிடமும் அன்புடன் பழகுவார்; அவ்வூரார் அனைவரும் அவரிடம் அன்பும் மரியாதையும் கொண்டு பழகினர்.

சின்னப்பருடைய மனைவி இறந்துவிட்டாள். அவருக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. கடைசிக் குழந்தையான ஒரு மகனைத் தவிர மற்றக் குழந்தைகள் ஒன்றன்பின் ஒன்ருக இறந்து விட்டனர். உயிரோடு இருந்த கடைசிப் புதல்வனைச் சின்னப்பர் மிகவும் அருமையாக வளர்த்து வந்தார். அப்பிள்ளையிடம் அவர் கொண்டிருந்த அன்பு அளவிடற்கரியதாகும். அப்பிள்ளை கட்டழகனுக, கல்வி அறிவுடையவனுக, தந்தையின் தொழிலில் பங்கு கொண்டுழைத்து, அவரை மகிழ்விப்பவனுக வளர்ந்தான். சின்னப்பன் தம் புதல்வன் மனிதருட் சிறந்த மாணிக்கமாக வாழ்ந்து முதுமைப் பருவத்தில் தமக்குப் பேராதரவாய் விளங்குவான் என்று எண்ணிப் பெருமகிழ்வுடன் இருந்தார். ஆனுல், அப்புதல்வனும் பிணிவாய்ப்பட்டு ஒருநாள் இறந்துவிட்டான். என்ன செய்வார் சின்னப்பர்! அவர் உள்ளம் உடைந்துவிட்டது.

அவர் நம்பிக்கை சிதறிப் போயிற்று; எவராலும் ஆற்றமுடியாத பெருந் துன்பத்துக் குள்ளானர். " இன்று வரை எவர்க்கும் நான் எத்தீங்கும் செய்த தில்லையே! பிறர் மனத்தைச் சுடும் சொற்களையும் நான் பேசியதில்லையே! இறைவா, உன்னை மறந்து ஒருநாளும் கழிக்கவில்லையே! அப்படி யிருந்தும் என் ஒரே மகனை, என் அன்பான மைந்தனை, என் உள்ளங் கவர்ந்திருந்த ஒரே செல்வனை, என் முதுமைக் காலத்தில் என்னைக் காப்பாற்றக் கூடிய ஒரே புதல்வனைப் பறித்துக் கொண்டனையே !

" என் அன்புடைய மனைவி இறந்தாள். மக்கள் பலர் பிறந்து இறந்தனர். எனக்கென்று விடப்பட்டிருந்த இவ்வொரு மகனையும் பறித்துக் கொண்டனையே இறைவா! முதுமைப் பருவத்தில், உடல் தளர்ந்த நிலையில் இன்னும் ஓயாதுழைத்து உயிர் வாழுமாறு என்னை மட்டும் ஏன் விட்டு வைத்திருக்கின்ருய் ? என்னையும் அழைத்துக் கொள். நானும் இறந்து தான் ஆகவேண்டும். என் மைந்தனைப் பிரிந்து நான் மட்டும் உயிர் வாழ்வதென்பது இயலாது. இறைவா! என்னையும் அழைத்துக் கொள் ! " என்று கதறினர்.

மகன் இறந்த துன்பம் அவரை வாட்டி வதைத்தது. அதனல் அவர் கோவிலுக்குச் செல்வதை நிறுத்திக் கொண்டார். நாள்தோறும் செய்யும் பூசை வகைகளைக் கைவிட்டார். வாழ்க்கையை வெறுத்தவராக நடைப்பிணம்போல் அவர் வாழ்ந்து வந்தார். எவரிடமும் அவர் பேசுவதில்லை; ஒரு வேளை மட்டுமே உண்ணத் தொடங்கினர்.

சின்னப்பருக்குத் தெரிந்த பெரியவர் ஒருவர் ஒரு நாள் சின்னப்பரின் வீட்டுக்கு வந்தார். அவர் அறிவும் ஒழுக்கமும் நிறைந்த சான்ருேர். சின்னப்பர் அவரை வரவேற்று விருந்தளித்தார்; தம் ஆருத் துயரத்தை அவரிடம் எடுத்துரைத்தார்.

சின்னப்பரின் துன்பங்களை எல்லாம் அவர் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தார். " சின்னப்பா ! இறைவன் இயல்பு சிந்தைக் கெட்டாதது; வியப்புக்குரியது; விளக்குவதற்கு இயலாதது ; நம் அறிவைக் கொண்டு பகுத்தறிய முடியாதது. அவன் இயக்குமாறு எல்லாம் இயங்குகின்றன ; நாம் எண்ணுவதுபோல் எதுவும் நடைபெறுவதில்லை. அவனன்றி ஓர் அணுவும் அசைவதில்லை. உன் மகன் இறத்தல் வேண்டுமென்பது இறைவன் நாட்டம். அதனுல்தான் அவன் இறந்தான். நீ வீணுக வருந்துகிருய். உன் முதுமைப் பருவ வாழ்வு இன்பமாகக் கழிவதற்கு உன் மகனைக் கருவியாக்க எண்ணினுய். உன் எண்ணம் நிறைவேறவில்லை. அதனுல்தான் நீ இவ்வாறு வருந்துகிருய் " என்று அப் பெரியவர் சின்னப்பரைப் பார்த்துக் கூறினுர்.

" அப்படியாயின் வேறு எதற்காகத்தான் மனிதன் வாழுகின்ருன் ? முதுமைப் பருவத்தில் உதவுவதற்குத்தானே மகனைப் பெறுகின்ருேம் !"

சின்னப்பா, நீ வாழ்வது உன் இன்பத்திற்காகவன்று. இறைவன் உன்னைப் படைத்தான். நீ இறைவனுக்காகவே வாழ வேண்டும். நீ இதை உணர்ந்து கொண்டால் ஒவ்வொரு செயலும் உன்

ஞல் நடைபெறவில்லை என்பதை நீ அறிந்து கொண்டால், உன்னை நீ அவனிடம் ஒப்படைத்து விட்டால், உனக்குக் கவலை ஏது? துன்பம் ஏது? நடப்பன எல்லாம் நன்மைக்கே என்பதையும், இறைவன் நாடியபடி நடப்பவற்றை மனிதன் மாற்றியமைத்து விட முடியாது என்பதையும் நீ நன்கு உணர வேண்டும்'' என்ருர் பெரியவர்.

சின்னப்பர் சிறிது ஆழ்ந்த சிந்தனைக்குப்பின், "இறைவனுக்காக வாழ்வதற்கு, என்னை அவனிடம் ஒப்படைப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"நாள்தோறும் அரைமணி நேரமாயினும் நீ திருமறை நூலைப்படி! ஏழைகளுக்குத் தொண்டு செய்! ஏழைகளுக்குத் தொண்டு செய்வதே இறைவனுக்குத் தொண்டு செய்வதாகும். உனக்கென்று எதனையும் கருதாதே! "நான்" எனும் சொல்லையே நீ மறந்துவிடு! ஏழைகளுக்கு உதவுவதற்காக உன் வாழ்வைப் பயன்படுத்து! இதுவே உன்னை நீ இறைவனிடம் ஒப்படைத்துக் கொண்டதாகும்" என்று கூறிவிட்டு, அப்பெரியவர் புறப்பட்டுச் சென்ருர். அவர் சென்ற திசையையே, நெடுநேரம் பார்த்துக்கொண்டு நின்ற சின்னப்பர் அன்றே சந்தைக்குச் சென்ருர்; திருமறை நூல் ஒன்றை வாங்கி வந்தார்; நாள்தோறும் அரைமணி நேரமாயினும் அதைப் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்; தம்மாலியன்ற வகையிலெல்லாம் ஏழை மக்களுக்கு உதவி செய்வதென்று உறுதி பூண்டார்.

பெரியவர் வந்து போனபின் சின்னப்பர் வாழ்க்கை முற்றிலும் மாறிவிட்டது. இதற்கு முன் இரவு படுக்கும் போதெல்லாம் மகனைப் பற்றிய எண்ணம் தோன்றி அவர் மனத்தை வாட்டும். அதனல் அவர் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக உறங்குவார். ஆனல் இப்பொழுது அவ்வெண்ணம் அடியோடு மறந்து தம்மை நாடிவரும் ஏழைகளுக்கு எவ்வெவ்வாறு உதவி செய்யலாம் என்பது பற்றிய எண்ணத்துடன் உறங்கத் தொடங்கினர். அவர் மனம் கவலையற்றுத் தெளிவாக இருந்தபடியால் நிம்மதியாகத் தூங்க முடிந்தது.

"உன்னிடம் உதவி கேட்பவர்களுக்கு இல்லை யென்னமல் கொடு; உன்னல் இயன்றவரை கொடு. உன்னிடம் வாங்கிச் சென்றவர்களிடமிருந்து நீ மீண்டும் பெற முயற்சி செய்யாதே. பிறரிடமிருந்து நீ எதிர்பார்ப்பது எதுவோ, அதை முதலில் நீ பிறருக்குச் செய். இறைவனுடைய வழியில் நடவாமல் 'இறைவா, இறைவா!' என்று நா வரளக் கத்துவதால் பயன் என்ன? சமயச் சின்னங்கள் பூணுவதால் பயனென்ன?

"மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்து அறன்; ஆகுல நீர பிற" என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். இறைவன் காட்டும் வழி பற்றி ஒழுகிச் செயல் ஆற்றுபவன் எவனே அவன் பாறை மீது இல்லம் அமைத்தவனுவான். இறைவன்காட்டும் வழியில் நடப்பதாக நடித்து, வெளியலங்காரத் தோற்றத்துடன் விளங்கிச் செயலில் மாறுபட நடப்பவன் மணல்மீது இல்லம் அமைத்தவனுவான்.

மழை பெய்து வெள்ளம் பெருகிப் புயலும் வீசினுல், பாறைமீதமைந்த இல்லம் உறுதியாக நிற்க, மணல் மீதமைந்த இல்லம் வெள்ளத்திற்கு இரையாகி விடுமன்ருே?" இவைபோன்ற மறை மொழிகள் சின்னப்பரின் உள்ளத்தில் பசு மரத்தாணி போலப் பதிந்தன. ஒரு நாளிரவு திருமறை நூலேப் படித்த வண்ணமாக, அப்படியே உறங்கிவிட்டார். எவரோ தன் காதருகில் வந்து 'சின்னப்பா!' என்று அழைத்ததுபோன்று செவியுற்றுத் திடுக்கிட்டு எழுந்தார். சுற்றும் முற்றும் பார்த்தார்; எவரும் காணப்பட வில்லே! 'யாரது?' என்று குரல் கொடுத்தார். விடை இல்லே. கதவருகில் கூர்ந்து நோக்கினுர். எவரும் காணப்படவில்லே. ஆனுல் அதே ஒலி மீண்டும் தெளிவாகக் கேட்டது.

"சின்னப்பா! நாளே நான் உன் வீட்டிற்கு வருவேன்" என்ற சொற்களேச் சின்னப்பர் தெளிவாகக் கேட்டார்; மும்முறை அதே போன்ற குரலேக் கேட்டார். அதற்குமேல் சின்னப்பருக்கு உறக்கம் வரவில்லே. தாம் கண்டது கனவா அல்லது உண்மையில் நிகழ்ந்ததா என அவரால் உணர்ந்து கொள்ள முடியவில்லே. தம் கண்களேக் கசக்கிக் கொண்டார்; எழுந்து நடமாடினுர்.

இறைவனேப் போற்றிய வண்ணம் மீண்டும் படுத்துறங்கி விட்டார். மறுநாள் விடியற் காலேயில் விழித்துக் கொண்டார். காலேக் கடன்களே முடித்துக் கொண்டு குளிர்ந்த நீரில் குளித்தார். இறைவனே வணங்கினுர். பின் அடுப்பில் தீ மூட்டிக் காலே யுணவுக்கு வேண்டியவற்றைச் செய்தார். இடை

யிடையே அவர் இரவு நடந்தவைகளைப் பற்றி நினைத்து கொண்டார். இரவு தாம் கண்டது கனவா? அல்லது உண்மை நிகழ்ச்சியா? தாம் கேட்ட சொற்கள் உண்மையா? அப்படியாயின். அவற்றைக் கூறியவர் எங்கே? என்றெல்லாம் அவர் எண்ணிய வண்ணம் இருந்தார். காலை உணவை முடித்துக் கொண்டபின், சின்னப்பர் தம் வேலையைத் தொடங்கினர். 'நாளை நான் உன் வீட்டிற்கு வருவேன்' என்று இரவு தாம் கேட்ட சொற்கள் அவர் மனத்தில் பதிந்திருந்தன. எனவே அடிக்கடி தம் வேலையை விட்டுச் சாளர ஓரத்தில் நின்று வெளியில் பார்த்த வண்ணம் இருந்தார். தம் இல்லம் நோக்கி இறைவன் எவ்வடிவில் வருவாரோ என்று எண்ணினர். தெருவில் போவோர் வருவோர் ஒவ்வொருவரையும் கூர்ந்து கவனிக்கச் செய்தார். சின்னப்பர் எதிர்பார்த்தவாறு எவரும் இவரில்லம் நோக்கி வராமல், அவரவர் வேலையைக் கவனித்த வண்ணம் வருவதும் போவதுமாக இருந்தனர். அவ்வமயம் ஒருவன் சின்னப்பன் இல்லம் நோக்கி வந்தான். அவன் தெருக்கூட்டும் தோட்டி. நாள் தோறும் தெருக் கூட்டுபவன். அன்றும் வழக்கம் போலத் தெருக்கூட்டி வந்தவன். அவன் சின்னப்பரின் வீட்டருகில் கூட்டுவதற்காக வந்தான். அவனைக் கண்ட சின்னப்பர் மனத்திற்குள் சிரித்துக் கொண்டார்.

"இவன் நாள்தோறும் நம் தெருவைக் கூட்டி வரும் தோட்டியல்லவா? தொலைவில் அடையாளம் தெரியாமல் இறைவன்தான் நம் வீட்டை நோக்கி

வருகிருன் போலும் என்று எண்ணிவிட்டேன்! எவ்வளவு முட்டாள் நான்! மூப்பினுல் எனக்குக் கண் பார்வை சரியாகத் தெரியாமையால் இவனைப் பார்த்து இறைவன் என்று எண்ணிவிட்டேனே" என்று கூறிக்கொண்டு தம் வேலையில் ஈடுபட்டார். இவ்வாறு சிறிது நேரம் கழிந்தது.

சின்னப்பரின் மனம் நிலைபடவில்லை. முன்னிரவு நினைவே அவருக்கு வந்து கொண்டிருந்தது. மறுபடியும் வேலையைவிட்டுச் சாளரத்தின் வழியே பார்த்தபோது, அந்தத் தோட்டி, தெருக்கூட்டும் விளக்குமாற்றைச் சுவரோரமாகச் சார்த்திவிட்டுக் களைப்புற்றவனுய் அவ் வீட்டருகில் ஓய்ந்து உட்கார்ந்தான்.

"வயது முதிர்ந்தவன் உழைப்பின் மிகுதியால் களைத்துவிட்டான் போலும்! அவனை உள்ளே அழைத்துச் சிறிது மோர் கொடுக்கலாம்" என்று சின்னப்பர் எண்ணினுர். உடனே கதவைத் திறந்து அந்தத் தோட்டியை உள்ளே அழைத்துவந்து உட்கார வைத்தார். உள்ளே வந்த தோட்டி, "கடவுள் உம்மைக் காப்பாராக" என்று கூறிக் கொண்டே, கால்களை நன்ருக உதறிவிட்டு வர முயன்றவன் முடியாமல் தள்ளாடினுன். தன்னுல் அந்த வீட்டின் தரையில் தூசியும் மண்ணும் படிந்து விடக் கூடாதே என அவன் எண்ணினுன்.

அவன் தள்ளாடுவதைக் கண்ட சின்னப்பர், "தரை மண்ணுகி விட்டால் என்ன! வாரும் மணை மீது உட்காரும். நான் என் வேலை முடிந்ததும் வீட்

டைக் கூட்டுவேன். அது என் அன்றாட வேலைகளுள் ஒன்று; எப்படியும் கூட்டியே ஆகவேண்டும் அல்லவா? நீர் வந்து அமர்ந்து மோர் பருகும்'' என்று சின்னப்பர் அன்புடன் கூறியது அந்தத் தோட்டி யின் மனத்தை மகிழ வைத்தது. சின்னப்பர் தோட்டிக்கு ஒரு குவளையில் மோர் ஊற்றிக் கொடுத்தார். தாமும் ஒரு குவளையில் மோர் ஊற்றிக் கொண்டு இருவருமாகக் குடித்தார்கள்.

தோட்டி மோரை ஒரே விழுங்காகக் குடித்து விட்டான். அதைக் கண்ட சின்னப்பர், அவன் மிகுந்த களைப்புடன் இருப்பதைக் கண்டு மீண்டும் அக்குவளை நிறைய மோர் ஊற்றிப் பருகுமாறு வேண் டினர். மோர் குடித்துக் கொண்டிருக்கையில், சின்னப்பர் அடிக்கடி சாளரத்தின் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்ட அந்தத் தோட்டி, "எவரையாவது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

"ஆம்; எவரை எதிர்பார்க்கிறேன் என்று சொல்ல முடியவில்லை. அதை எப்படிச் சொல்வ தென்பதும் எனக்குப் புரியவில்லை. உண்மையாகவே என் மனம் எவரையோ எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறது. அது எவர் என்று சொல்லவும் தெரியவில்லை. எதிர்பார்த்துக் கொண்டில்லை என்று சொல்லிவிடவும் முடியாது. நேற்றிரவு நான் காதால் கேட்டது, என் மனத்தினின்று அகலவில்லை. நீ மறை நூலைப் படித்திருக்கிருயா?'' என்று சின்னப்பர் தோட்டியைப் பார்த்துக் கேட்டார்.

"ஐயா, நான் எழுதப் படிக்கத் தெரியாதவன். திருமறை நூலைப் படித்ததில்லை. ஆனால் இறைவனுடைய கருணையைப் பற்றிப் படித்தவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்," என்றான் அந்தத் தோட்டி.

"நேற்றிரவு திருமறை நூலைப் படித்தபடியே நான் தூங்கிவிட்டேன். நான் ஆழ்ந்த தூக்கத்திலிருந்தபோது, "நாளை நான் உன் வீட்டிற்கு வருவேன்; என்னை எதிர்பார்" என்னும் சொற்கள் என் காதருகில் தெளிவான குரலில் கேட்டன. இவ்வாறு மிகத் தெளிவாக மும்முறை கேட்டது. இது என் மனத்தில் நிலையாகப் பதிந்துவிட்டது. ஆதலால் சாளரத்தை அடிக்கடி பாராமல் இருக்க என்னால் முடியவில்லை. இச்செய்தியை உன்னிடம் சொல்ல எனக்கு வெட்கமாயிருந்தது. எனினும் சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை," என்று கூறினார் சின்னப்பர்.

தோட்டியால் ஒன்றும் கூற முடியவில்லை. பேசாமல் தலையாட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். சின்னப்பரோ மூன்றும் முறையாக அந்தத் தோட்டியின் குவளையில் மோர் நிரப்பினார். அவன் "போதும் போதும்" என்று கூறியும் குடிக்குமாறு வேண்டினார் சின்னப்பர்.

"இறைவன் பாமர மக்களிடை, வறிய மக்களிடை, நம் போன்ற ஏழைகளிடை, ஆதரவற்றவர்களிடையே தான் நடமாடுகின்றார்; இரக்கமுடையவர்கள், அடக்க முடையவர்கள், பணிந்து நடப்பவர்கள், ஏழைகளாக வாழ்பவர்கள் ஆகி

யோரே இறைவனது அன்பிற்கு உரியவர்களாவார் கள்" என்று திருமறை நூல் கூறுகின்றது. எவர் பிறர்க்குத் தொண்டாற்றுகின்ருரோ, அவரே இறை வனின் தொண்டர் எனவும், மக்கட்பணியே இறை வனின் பணியாகும் எனவும், 'அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும்' எனவும் திருமறை கூறுகிறது" என்று சின்னப்பர் கூறினர். இவற்றைக் கேட்ட தோட்டி, கையில் பிடித்துள்ள குவளையில் ஊற்றப்பட்ட மோரைக் குடிக்காமல் கண்களில் நீர் சோரச் சின்னப்பரின் முகத்தையே பார்த்துக் கொண் டிருந்தார்.

அவர் பேச்சை நிறுத்தியதும், "பெரியவரே! என் பசியையும் களைப்பையும் போக்கி என் உடலுக்கு மட்டுமல்லாமல் என் உள்ளத்திற்கும் ஆறுதல் அளித்துவிட்டீர். உங்களுக்கு என் மன மார்ந்த நன்றி, என் உள்ளமும் உடலும் உங்கள் பொன்னுரையால் உறுதி பெற்றன" என்று அந்தத் தோட்டி கூறி, மோரைப் பருகினன்; பிறகு விடை பெற்று வெளியே சென்ருன்.

சின்னப்பர் மீண்டும் தம் வேலையில் ஈடு பட்டார்; சிறிது நேரம் வேலை செய்வதும், சாளரத் தின் வழியே வெளியில் பார்ப்பதுமாக வேலை செய்து கொண்டிருந்தார். இவ்வாறு ஒரு மணி நேரம் சென்ற பிறகு, கிழிந்த உடையணிந்த பெண் ஒருத்தி கையில் ஒரு குழந்தையுடன் தன் வீட்டுச் சாளரத் தின் சுவர் ஓரமாய் வந்து நின்ருள். அந்தக் குழந்தை ஓயாமல் அழுது கொண்டிருந்தது. அதற்கு அவள்

பால் கொடுக்க முயன்றும் பாலில்லாமையால் அதன் அழுகை ஓயவில்லை.

வெளியில் மழைக்காற்று வீசியதால், குளிரினின்று பாதுகாக்க அக்குழந்தையின் மேல் ஒரு துணியு மில்லை. குளிரும் பசியும் வாட்டவே, அக்குழந்தை வீறிட்டழுது கொண்டிருந்தது. என்ன செய்வ தென்றறியாமல் அந்தத்தாய் காற்றடிக்கும் திசையில் முதுகைத் திருப்பிச் சுவரோடு ஒட்டி நின்று குழந்தை மீது காற்றுப்படாமல் அதனை அணைத்துக் கொண்டாள். இந்த நிலை சின்னப்பரின் மனதை உருக்கிவிட்டது.

சின்னப்பர் கதவைத் திறந்துகொண்டு வெளியே சென்று அந்தப் பெண்ணைப் பார்த்து, "ஏன் அங்கே குளிர்காற்றில் நின்றுகொண்டிருக்கிறுய் உள்ளே வா; குழந்தைக்குப் போர்த்தத் துணி தருகிறேன்," என்று அழைத்தார்.

அவள் அவர் பின்னுல் வீட்டுக்குள் வந்தாள்; தன் சோகக் கதையை அவரிடம் கூறினுள்.

அவள் பசியால் களைப்புற்று இருப்பதை அறிந்த சின்னப்பர் முதலில் அவளுக்கு உணவு கொடுத்து உண்ணும்படி வேண்டினுர். தயிராக்கு வதற்காகத் தாம் வைத்திருந்த பாலைக் குழந்தைக்குப் புகட்டுமாறு செய்தார். பசியாறியபின் அக் குழந்தை விளையாடத் தொடங்கியது. அக் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிச் சிரிக்க வைத்தவாறு அவள் கூறிய கதையைச் சின்னப்பர் கேட்கத் தொடங் கினுர்.

“என் பெயர் வள்ளி. நான் ஒரு படைவீரனின் மனைவி. போர்க்களம் சென்ற என் கணவர் திரும்பி வரவேயில்லை. கடந்த எட்டு மாதங்களாக அவரிட மிருந்து எவ்விதத் தகவலும் இல்லை. இந்தக் குழந்தை பிறக்கும் வரையில் ஒரு வீட்டில் சமையற் காரியாக வேலை செய்தேன். இக்குழந்தை பிறந்த பின் அவர்கள் வேலையினின்று என்னை நீக்கி விட்டார்கள்.

“கடந்த மூன்று மாதங்களாக நான் வேலை யின்றித் திண்டாடுகிறேன். என்னிடமிருந்த விற்கக் கூடிய பொருள்கள் எல்லாவற்றையும் விற்றுவிட் டேன். இறுதியாக ஒரு வணிகரின் மனைவி என்னை வேலைக்கு அமர்த்திக்கொள்ள இணங்கினாள். ஆனால் அடுத்த வாரம் முதல் வேலைக்கு வரச்சொன்னாள்.

அவள் இருக்கும் ஊர் இன்னும் பத்துமைல் தொலைவில் இருக்கிறது. நடந்துவந்த இளைப்பும், நேற்றிரவு முதல் உணவில்லாமையால் வந்த களைப்பும் சேர்ந்து என்னை மேற் கொண்டு ஓரடியும் எடுத்து வைக்க முடியாமற் செய்துவிட்டது. என் குழந்தையோ பசியாலும் குளிராலும் கதறத்தொடங்கி விட்டது. தக்க சமயத்தில் நீங்கள் உதவி செய்தீர் கள்” என்று வள்ளி என்ற அப்பெண் கூறினாள்.

“குழந்தையைக் குளிர் தாங்காமல் காக்கப் போர்வை ஒன்றும் உன்னிடம் இல்லையா?” என்று சின்னப்பர் கேட்டார்.

“ எப்படி இருக்க முடியும்? கடைசியாக வைத்திருந்த ஒரே ஒரு சால்வையைக் கூட நேற்று எட்டணுவுக்கு அடகுவைத்து விட்டேனே! ” என்று கூறிய வள்ளி தன் குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு புறப்பட ஆயத்தமானுள். சின்னப்பர் தம் பெட்டியைத் திறந்து ஒட்டுப் போட்டுத் தைக்கப் பட்டிருந்த தம்முடைய போர் வையைக் கொண்டு வந்து கொடுத்து, “ அம்மா, இது கிழிந்தது. ஆனுல் ஒட்டுப் போட்டுத் தைத் திருக்கிறேன். குளிருக்காக நான் வைத்திருக்கும் ஒரே போர்வை இதுதான்; இதை நீ எடுத்துக்கொள். இது குழந்தையைக் குளிரினின்று காக்கும் ” என்று கூறினுர். அவரே அந்தப் போர்வையைக் குழந்தை உடலில் போர்த்தார்.

வள்ளி அந்தப் போர்வையைப் பார்த்தாள்; பிறகு சின்னப்பரை பார்த்தாள். “ ஆண்டவன் உமக்கு அருள் புரிவாராக. எனக்கும் என் குழந்தைக்கும் உதவி செய்யக் கடவுள்தான் உம்மைச் சாளரத் தின் அருகில் அனுப்பினுர் போலும்! நீர் தக்க சமயத்தில் உதவினீர். இல்லை என்ருல் என் குழந்தை பசியால் வாடிக் குளிரால் ஒடுங்கி இறந்து விட்டிருக்கும். இறைவன் உமக்குக் கோடி நலன்கள் அருளுவாராக ” என்று வாழ்த்திஞள்.

வள்ளி அப்போர்வையால் தன் குழந்தையை நன்கு போர்த்தி மீண்டும் ஒரு முறை சின்னப் பருக்கு நன்றி கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

சின்னப்பர் அவளிடம் சிறிது காசு கொடுத்து, “அடகு வைத்த போர்வையை வாங்கி நீ போர்த்துக்கொண்டு போ!” என்று கூறி வழியனுப்பினர்.

சின்னப்பர் பழையபடி வேலை செய்வதும் தெருவில் பார்ப்பதுமாக இருந்தார். பழையபடி அவருடைய கண்கள் தெருவில் போவோர் வருவோரைக் கவனித்த வண்ணம் இருந்தன. “கடவுள் இன்னும் வரவில்லையே! அவர் எந்த வடிவில் வருவாரோ?” என்று எதிர்பார்த்த வண்ணம் இருந்தார். அச்சமயம் அவர் வீட்டுச் சாளரத்தின் எதிரில் பழக்காரி ஒருத்தி வந்து நின்ருள். அவள் தலைமீதிருந்த கூடையில் சில பழங்கள் இருந்தன. தோளில் தொங்கிய ஒரு கோணிப் பையில் அவள் சுள்ளிகளைப் பொறுக்கித் திணித்து வைத்திருந்தாள்.

அந்தக் கோணிப் பையை மற்ருெரு தோளுக்கு மாற்றுவதற்காக அவள் பழக்கூடையைக் கீழே இறக்கி வைத்தாள்.

கிழிந்த ஆடையணிந்த ஒரு சிறுவன் பழம் ஒன்றை அக் கூடையிலிருந்து எடுத்துக் கொண்டு ஓட முயன்ருன். ஆனுல் பழக்காரி அவனைப் பிடித்துக் கொண்டாள்; ஏசினுள்; இரண்டடியும் கொடுத்தாள்; நகரக் காவலரிடம் ஒப்புவிப்பதாக அவனை இழுத்தாள். இவற்றை யெல்லாம் சாளர வழியே சின்னப்பர் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் உடனே வெளியே ஓடிவந்து பழக்காரியிடம் கெஞ்சி, அச்சிறுவனை விட்டு விடுமாறு வேண்டினர்.

அவருடைய கெஞ்சுதலைக் கண்ட பழக்காரி மனமிரங்கி அவனை விட்டுவிட்டாள்.

விட்டால் போதும் தப்பியோட என்றிருந்த அச் சிறுவனைச் சின்னப்பர் பிடித்துக் கொண்டு, "நீ பழம் திருடியதை நான் பார்த்தேன், பழக்காரியிடம் மன்னிப்புக் கேள். மறுபடியும் இந்தத் திருட்டு வேலையைச் செய்யாதே! உழைத்துப் பிழைக்கக் கற்றுக்கொள்!" என்று அறிவுரை கூறினர்; பழக்காரியிடமிருந்து ஒரு பழத்தை விலைக்கு வாங்கி அச் சிறுவனிடம் கொடுத்தார்.

அச்சிறுவன் அழுதவண்ணம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். இனி எப்பொழுதும் திருடுவதில்லை என்று வாக்குறுதி கொடுத்தான். ஆனல் அப்பழக்காரியோ, "இவ்வாறு இத்தகைய கீழ்மக்களிடத்தில் நீர் இரக்கம் காட்டுவதால் இவர்களை மேலும் கெடுப்பவராகின்றீர். இவர்களைச் சாட்டையாலடித்துத்தான் திருத்த வேண்டும்," என்று கூறினள்.

"அம்மா! அடித்துத் திருத்துவது நாம் செய்யும் வேலை; இறைவன் நெறி அது அன்று. ஒரு பழம் திருடியதற்காகக் கசையடி என்றல், நாம் செய்யும் எவ்வளவோ தவறுகளுக்கு எத்தகைய தண்டனைகளைப் பெறுதல் வேண்டும்? மன்னிப்பது நமது கடமை. இல்லையெனில் கடவுள் நம்மை மன்னிக்க மாட்டார். அதிலும் சிறியவன் செய்த இச்சிறு பிழையைப் பெரியவர்களாகிய நாம் பொறுப்பது நம் கடமையாகும். 'ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்; பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்'

அல்லவா !'' என்று அப்பழக்காரிக்குச் சின்னப்பர் அறிவுரை கூறினர்.

"ஆம், நீர் கூறுவது உண்மையே. ஆனல் இவர்கள் மன்னிக்கப்பட்டால் மேலும் கெட்டு விடுவார்களே !'' என்ருள் பழக்காரி.

"அவர்கள் கெடாமல் இருக்க, பெரியவர்களாகிய நாம் நன்னெறியைக் கடைப்பிடித்து நடந்து, அவர்களுக்கு முன்மாதிரியாகவும் வழிகாட்டிகளாகவும் விளங்க வேண்டும்'' என்ருர் சின்னப்பர்.

பிறகு கிழவி, கோணிப்பையைத் தோளில் மாட்டிக்கொண்டுப் பழக்கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக்கொள்ள முயன்ருள். உடனே அங்கு நின்று கொண்டிருந்த சிறுவன், "அம்மா, நானும் இந்த வழியே தான் வருகிறேன். கூடையை என் தலைமீது வையுங்கள், சுமந்துகொண்டு வருகிறேன்,'' என்ருன். பழக்காரி அதற்கு இணங்கினுள். பழக்காரியும் சிறுவனுமாக அவ்விடத்தை விட்டுச் சென்றனர். சின்னப்பர் உள்ளே வந்து பழையபடி தம் வேலையைத் தொடர்ந்து செய்தார். ஆனல் கதிரவன் மறைந்து இருள் எங்கும் சூழத் தொடங்கி விட்டது.

சின்னப்பர் வேலைகளை நிறுத்திவிட்டு, அவ்வறையைக் கூட்டினர்; விளக்கேற்றினர்; முகம் கைகால்களை அலம்பிக் கொண்டு பிறகு திருமறை நூலை எடுத்து வைத்துக் கொண்டுப் படிக்கத் தொடங்கினர்.

திருமறை நூலைப் பிரித்தவுடனே முன்னாளிரவு கண்ட கனவின் நினைவு அவர் மனத்தில் தோன்றியது. அதே நேரத்தில் தமக்குப் பின்னால் எவரோ நடமாடுவது போன்ற ஓசை அவர் செவியிற்பட்டது.

சின்னப்பர் திரும்பிப் பார்த்தார். அந்த அறையின் மூலையில், மங்கிய ஒளியில், எவரோ நிற்பது போலத் தோன்றியது. ஆனால் தெளிவாகத் தெரியவில்லை. சின்னப்பர் கூர்ந்து நோக்கினார்.

"சின்னப்பா! என்னைத் தெரியவில்லையா? நான்தான் தோட்டி" என்ற சொற்கள் அவர் செவியில் தெளிவாகக் கேட்டன. மூலையிலிருந்து தோட்டி ஒரு நிமிட நேரம் விளக்கொளியில் நின்று புன்சிரிப்புச் சிரித்துவிட்டு மறைந்து விட்டான்.

"என்னைத் தெரியவில்லையா உமக்கு? இதோ பாரும் என் குழந்தை," என்று கூறிக்கொண்டே, கையில் குழந்தையுடன் காலையில் வந்த அதே பெண் வள்ளி, அந்த இருட்டு நிலையிலிருந்து விளக்கொளியில் ஒரு நிமிடநேரம் வந்து நின்று சிரித்தாள். அக் குழந்தையும் சிரித்தது. பிறகு தாயும் குழந்தையும் மறைந்து விட்டனர்.

"எங்களைத் தெரியவில்லையா உமக்கு?" என்று கூறிக்கொண்டே அந்த மூலையிலிருந்து பழக்காரியும் சிறுவனுமாக விளக்கொளியில் வந்து நின்றுவிட்டுச் சின்னப்பரைப் பார்த்துப் புன்முறுவல் செய்தவண்ணம் மறைந்து போய்விட்டனர்.

0 31/3/60
Nos—



சின்னப்பர் மனநிறைவு பெற்று மகிழ்ச்சியுடன் திருமறை நூலைப் புரட்டியபோது, "நான் பசியுடனிருந்தேன். நீ உணவளித்தாய். நான் நீர்வேட்கையுடனிருந்தேன், நீ பருகக் கொடுத்தாய். நான் உனக்குப் புதியவனாக இருந்தேன், நீ என்னை உன் இல்லத்திற்கு அழைத்து அமர்த்தி ஆதரவு காட்டினாய். என் குழந்தைகளுள் மிகக் கீழான நிலையிலிருந்தவர்களுக்குக் கூட நீ செய்த உதவி எனக்குச் செய்த உதவியே ஆகும்" என்ற சொற்றொடர்களைப் படித்தார்.

தம் கனவு பலித்துவிட்டதென்றும், இறைவன் தோட்டி வடிவிலும், பெண் வடிவிலும், பழக்காரி—சிறுவன் வடிவிலும் தம் இல்லம் வந்தாரென்றும் உணர்ந்து சின்னப்பர் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தார். எளிய மக்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டாகும். அன்பர் பணி செய்வதொன்றே நம்மை இறைவனுடைய அருள் நெறியில் கூட்டிவைக்கும் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து நடந்து கொள்ளவேண்டும்.

## பயிற்சி

73963

1. சின்னப்பர் நடைப்பிணம் போல வாழ்ந்த வரலாறு.
2. சின்னப்பருக்குப் பெரியவர் செய்த உபதேசம்.
3. சின்னப்பரும் தோட்டியும்.
4. சின்னப்பரும் ஏழைப் பெண்ணும்.
5, சின்னப்பரும் பழக்காரியும்.
9. சின்னப்பரின் கனவு பலித்த விதம்.

(இவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒன்றரைப் பக்கங்களுக்கு மிகாமல் ஒவ்வொரு கட்டுரை வரைக.)

